ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# ஸ்ரீவைஷ்ணவக்ரந்த முத்ராபகஸபை (வீமிெ



## இச்சபையில் தமிழ்லிபியில் அச்சிட்ட க்ரந்தங்கெ



| | | |
|---|---|---|
| தனிஸ்லோகம் ஸவ்யாக்யாகம், ப்ரதிபத தாத்பர்ய ஸஹிதம் | | 3 |
| பாரதாதி தனிஸ்லோகம் | ” ” | 0 |
| ராமசரமஸ்லோகம் | ” ” | 0 |
| துஷ்கரஸ்லோகடிப்பணி | | 0 |
| யதிதர்ம ஸமுச்சயம் | | 1 |
| முதல் திருவந்தாதி | ” அரும்பத ப்ரதிபத ஸஹிதம் | 1 |
| இரண்டாம் திருவந்தாதி | ” ” ” | 0 |
| மூன்றாம் திருவந்தாதி | ” ” ” | 0 |
| நான்முகன் திருவந்தாதி | ” ” ” | 0 |
| திருவிருத்தம் | ” அரும்பத ப்ரதிபத் தாத்பர்ய ஸஹிதம் | 3 |
| திருவாசிரியம் | ” ” | 0 |
| பெரிய திருவந்தாதி | ” ப்ரதிபத ஸஹிதம் | 0 |
| திருவெழுகூற்றிருக்கை | ” ” | 0 |
| சிறிய திருமடல் | ” ” | 0 |
| பெரிய திருமடல் | ” ” | 0 1( |
| திருக்குறுந்தாண்டகம் | ” ” | 0 5 |
| திருநெடுந்தாண்டகம் | ” ” | 2 ( |
| பெரியதிருமொழி க-உ-ங, பத்துக்கள் | ” | 5 1: |
| திருப்பல்லாண்டு | ” ” | 0 1( |
| இராமாநுச நூற்றந்தாதி உரையுடன் | | 0 1/ |
| பராசரவிசிஷ்ட பரமதர்ம சாஸ்த்ரம் தாத்பர்ய ஸஹிதம் | | |
| ஷண்மததர்சினி | | |

இப்படிக்கு,

**கராலப்பாடி - ஆழ்வார**

காரியகர்த்தா - காசி





ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# பொதுத் தனியன்கள்



### அழகிய மணவாள னருளிச்செய்தது.

𑌶𑍍𑌰𑍀𑌶𑍈𑌲𑍇𑌶 𑌦𑌯𑌾𑌪𑌾𑌤𑍍𑌰𑌂 𑌧𑍀𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌗𑍁𑌣𑌾𑌰𑍍𑌣𑌵𑌮𑍍 ।
𑌯𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌪𑍍𑌰𑌵𑌣𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌰𑌮𑍍𑌯𑌜𑌾𑌮𑌾𑌤𑌰𑌂 𑌮𑍁𑌨𑌿𑌮𑍍 ॥

ஸ்ரீஸைலேஸ தயாபாத்ரம் தீபக்த்யாதிகுணார்ணவம்।
யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம்॥

### கூரத்தாழ்வா னருளிச்செய்தது.

𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌨𑌾𑌥𑌸𑌮𑌾𑌰𑌮𑍍𑌭𑌾𑌂 𑌨𑌾𑌥𑌯𑌾𑌮𑍁𑌨𑌮𑌧𑍍𑌯𑌮𑌾𑌮𑍍 ।
𑌅𑌸𑍍𑌮𑌦𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌪𑌰𑍍𑌯𑌨𑍍𑌤𑌾𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌗𑍁𑌰𑍁𑌪𑌰𑌮𑍍𑌪𑌰𑌾𑌮𑍍 ॥

லக்ஷ்மீநாதஸமாரம்பாம் நாத யாமுநமத்யமாம்।
அஸ்மதாசார்யபர்யந்தாம் வந்தே குருபரம்பராம்॥

𑌯𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌚𑍍𑌯𑍁𑌤𑌪𑌦𑌾𑌮𑍍𑌬𑍁𑌜𑌯𑍁𑌗𑍍𑌮𑌰𑍁𑌕𑍍𑌮
𑌵𑍍𑌯𑌾𑌮𑍋𑌹𑌤𑌸𑍍𑌤𑌦𑌿𑌤𑌰𑌾𑌣𑌿 𑌤𑍃𑌣𑌾𑌯 𑌮𑍇𑌨𑍇 ।
𑌅𑌸𑍍𑌮𑌦𑍍𑌗𑍁𑌰𑍋𑌰𑍍𑌭𑌗𑌵𑌤𑍋𑌽𑌸𑍍𑌯 𑌦𑌯𑍈𑌕𑌸𑌿𑌨𑍍𑌧𑍋𑌃
𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌸𑍍𑌯 𑌚𑌰𑌣𑍌 𑌶𑌰𑌣𑌂 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑍇 ॥

யோ நித்யமச்யுதபதாம்புஜ யுக்ம ருக்ம
…ாஹத ஸ்ததிதராணி த்ருணாய மேநே।
அஸ்மத் குரோர்பகவதோ ஽ஸ்ய தயைகஸிந்தோ:
ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே॥

## பொதுத்தனியன்கள்.

### ஆளவந்தா ரருளிச்செய்தது.

𑌮𑌾𑌤𑌾 𑌪𑌿𑌤𑌾 𑌯𑍁𑌵𑌤𑌯𑌸𑍍𑌤𑌨𑌯𑌾 𑌵𑌿𑌭𑍂𑌤𑌿𑌃
𑌸𑌰𑍍𑌵𑌂 𑌯𑌦𑍇𑌵 𑌨𑌿𑌯𑌮𑍇𑌨 𑌮𑌦𑌨𑍍𑌵𑌯𑌾𑌨𑌾𑌮𑍍 ।
𑌆𑌦𑍍𑌯𑌸𑍍𑌯 𑌨𑌃 𑌕𑍁𑌲𑌪𑌤𑍇𑌰𑍍𑌵𑌕𑍁𑌳𑌾𑌭𑌿𑌰𑌾𑌮𑌂
𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍍𑌤𑌦𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌯𑍁𑌗𑌳𑌂 𑌪𑍍𑌰𑌣𑌮𑌾𑌮𑌿 𑌮𑍂𑌰𑍍𑌧𑍍𑌨𑌾 ॥

மாதா பிதா யுவதய ஸ்தநயா விபூதிஸ்
ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம்।
ஆத்யஸ்ய நஃ குலபதேர் வகுளாபிராமம்
ஸ்ரீமத் ததங்க்ரியுகளம் ப்ரணமாமி மூர்த்நா॥

### பராஶரபட்ட ரருளிச்செய்தது.

𑌭𑍂𑌤𑌂 𑌸𑌰𑌶𑍍𑌚 𑌮𑌹𑌦𑌾𑌹𑍍𑌵𑌯 𑌭𑌟𑍍𑌟𑌨𑌾𑌥
𑌶𑍍𑌰𑍀𑌭𑌕𑍍𑌤𑌿𑌸𑌾𑌰 𑌕𑍁𑌲𑌶𑍇𑌖𑌰 𑌯𑍋𑌗𑌿𑌵𑌾𑌹𑌾𑌨𑍍 ।
𑌭𑌕𑍍𑌤𑌾𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌰𑍇𑌣𑍁 𑌪𑌰𑌕𑌾𑌲 𑌯𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌿𑌶𑍍𑌰𑌾𑌨𑍍
𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍍𑌪𑌰𑌾𑌙𑍍𑌕𑍁𑌶𑌮𑍁𑌨𑌿𑌂 𑌪𑍍𑌰𑌣𑌤𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑍍 ॥

பூதம் ஸரஶ்ச மஹதாஹ்வய பட்டநாத
ஸ்ரீபக்திஸார குலசேகர யோகிவாஹாந்।
பக்தாங்க்ரிரேணு பரகால யதீந்த்ரமிஶ்ராந்
ஸ்ரீமத்பராங்குஶமுநிம் ப்ரணதோ ऽஸ்மி நித்யம்॥



வயாக்க்யாநம்.—(குருமுகமநதீத்ய) - குரு
ஸ்வதஸ் ஸர்வஜ்ஞனை ஸர்வேஸ்வரனும், (க) "ஸாங்கோபாங்
ஸூ வேதசாஸ்த்ராணி ஸங்க்ருஹ்ய ஸாந்தீபநேஸ்ஸக்ருத்
ப்ரஹ்மவித்யாம் ஸவிஸ்தராம்" என்னும்படி - ஸாந்தீபநு
யாய்த்து ஸகலவேதங்களையும் அதிகரித்தது; இவர், அ
குருகுலவாஸம் பண்ணி தந்முகேந (உ) *நலங்களாய நற்கலை
யும் அதிகரியாதே, புண்டரீகரைப்போலே (ங) *துளவ
டிலே மண்டி, ஸ்ரீமாலாகாரரைப்போலே (ச) *சூட்டுநன்மா
தொடுத்து, வடபெருங்கோயி லுடையானுக்குச் சூட்டி அடி
து போந்தார்; ஏவம்வித தாஸ்ய ரஸஜ்ஞரான இவர், (நாவே
ஷ்டும் ஸமுத்ஸாஹ தத்கராஃ-நரபதிபரிக்லிப்தம் ஸுல்கமாத
என்று-ஸ்ரீவல்லபதேவனென்கிற ராஜாவானவன் பரதத்வ நிர்ண
கமாகப் புருஷார்த்தலாபத்தை லபிக்கைக்காக அநேகமான அர்
வித்யாசுல்கமாகக் கல்பித்துக் கல்தோரணத்திலே கட்டினை
படிநிர்மிதமான அந்த தநத்தை வடபெருங்கோயிலுடை
டைய ஆஜ்ஞையாலே ஆஹரித்துக்கொண்டு வரவேணுமென்கி
கைஷயையுடையராய், வித்வத்கோஷ்டியிலே சென்று, (
நு - வேதாநு - ஹ்ராஹ-அஸேஷாந்- வேதாந்-ப்ராஹ) (மு
டிய வேதங்களோதி விரைந்து கிழியறுத்தான்" என்றதை
லுகிறது. இவர்க்கு அப்போது (ரு) *வேதப்பிரானார்
வாடைப் பிரானார்தாமே பிரமகுருவாய், (எ) *போதில்கமல
ஞ்சம் புகுந்து (அ) *நாவினுளானாய்; (கூ) *நாவினுள் நின்று
ஞானக்கலைகளை இவர்முகேந பேசுவித்தானிறே. (க0) *எட்
மண்கொண்ட வெந்தையான (கக) *ஞானப்பிரானாய்த்து இவ
*ஞானக்கலைகளை ஓதுவித்தது. ஆகையாலே நாட்டார்க்கு ஓ
மொழிந்து ஓதாதவிடம் தெரியாதிருக்கும்; இவர்க்கு *
நலமருளுகையாலே அசேஷவேதங்களு மருளிச்செ
மாய்த்து. அத்தாலே (கஉ) "வேதாந்த விழுப்பொ

(க) (உ) தி-ச-வி-கூ0. (ங) தி-மா-சுடு. (
(ரு) பெரி-திரு-தனி. (சு) பெரி-திரு-ரு-உ-க. (எ
(அ) தி-வாய்-க-கூ-எ. (கூ) தி-வாய்-க-கூ-அ. (க0)
(கக) தி-வி-கூக. (கஉ) பெரி-திரு-ச-ங-கக.

னுகி ட்டுசித்தன் விரித்தனன்" என்னும்படி பரதத்வ ஸ்தா
கள் 1 அந்த வேததாத்பர்யமான திருப்பல்லாண்டை, (க)
கார மல் மங்கலவீதி வருகையிலே மங்களாசாஸநமாக வரு
நபே ர். "வேஷாநஸேஷாநு - வேதாநஸேஷாந்" என்கிறதுக்
வி துவும் ஆர்தர்ப்பூதம். (உ) "வேதெஸ்ச ஸர்வை ரஹ
ன் ஏ- வேதைஸ்ச ஸர்வை ரஹமேவ வேத்ய:" என்னக் கட
ப்

"

ஸாரூ - ஸ்வயம்வரம்) அநந்தரம், வித்வான்களை வென்று
த்து அந்த தநத்தை ஸ்வாமிஸந்நிதியிலே ஸமர்ப்பித்து,மீள
ம் துறையான (ஙு) *துளவத்தொண்டிலே மூண்டு நடத்திக்
டு போர; அக்காலத்திலே ஆண்டாள் இவர்க்குத் திருமகளா
நத்துழாயடியிலே அவதரிக்க; இவரும் (ச) திருமகள்போல
துப்போர; அஞ்சுபிராயத்திலே, திருவாய்ப்பாடியில் பஞ்ச
குடியில் பெண்களை அநுகரித்துத் திருப்பாவைபாடி, அதுக்
ல, அவர் (ரு) *தொடுத்த துழாய்மலரை, (சு) "வியன்துழா
பன்றுசூடும் கருங்குழல்மேல்" என்கிறபடியே சூடிக்கொ
ளாய், பின்பு ப்ராப்தயௌவனையாய், (எ) * மானிடவர்க்
பேச்சுப்படில் வாழாததன்மையளாய், (அ) "தீமுகத்து
மேல்சேரும் திருவரங்கர்" என்றும், (கூ) "பணவாளரவணைப்
காலமும் பள்ளிகொள் மணவாளர்" என்றும் சொல்லப்படு
றகிய மணவாளப்பெருமாளை ப்ரார்த்தித்துத் திருமணம் புண
ாலே அவர் மணவாளப்பிள்ளையானார். (க0) * மறைநான்கு
றதிய பட்டனுக்கிறே (கக) *பட்டர்பிரான் கோதையைக்கொ
ஆகையாலே, ஔபசாரிகமாகவன்றிக்கே, யதிவாக ரங்கநா
ப் பட்டநாதர் மாமனாரானார். அத்தாலே (கூரேவந்தூ - அமர
ம்) என்கிறது. அதாவது - (கஉ) *வடிவுடைவானோர் தலைவ
தன்னை, அவர்கள் அடிவணங்கி ஏத்துமாபோலே, இவர்
ம் அமரர் வந்திக்கும்படியான வரிசை கொடுத்தபடி.

---

நா-தி-சு-க0. (உ) கீ-கரு-கரு. (ங) தி-மா-சரு.
பெரி-தி-ங-அ-ச. (ரு) தி-ப-கூ. (சு) ங-திரு-சுகூ.
ரு-டு. (அ) நா-தி-கக-க. (கூ) நா-தி-க0-சு.
[illegible] (கக) தி-பா-ஙo. (கஉ) தி-வாய்-அ-உ-க0.

010468

திருப்பல்லாண்டின் தனியன்கள் வ்யாக்யா

(க) * தம்மையே யொக்க வருள்செய்வரிறே. பட்டநா
மன்றிக்கே, தேவர்களாலும் ஸ்துத்யராயிருக்குமவரென்கி
ரும்புவ ரமரர்மொய்த்து" என்னக்கடவதிறே. அஸ்த்தா
ஜனானவர்களையும் இவர் மங்களாசாஸநம் பண்ணுமவா
அவர்களும் இவர்க்கு ஸ்துத்யபி(ரீ)வாதநங்களைப் பண்ணு
"வரஸூரநீவஹாஜெவெः - பரஸ்பரநீசபாவைः" என்னக்க

இனி ரங்கநாதனோடே ஸம்பந்திக்கைக்கீடான பட்ட
த்தைச்சொல்லுகிறது (த்விஜகுலதிலகம் - த்விஜகுலதிலகம்)
(ச) * வேயர்தங்கள்குலத்துதித்த விட்டுசித்தராகையாலே, (
தணையான்கண்ட தணிநீர்த்தென்னரங்கத்தே" என்னும்ப
கொடுத்தார். த்விஜகுலதிலகராகையாவது - ப்ராஹ்மண
கெல்லாம் முக்க்யராய், ப்ரஸாவாஹ்யராய், ஶ்ரேஷ்டரா
யென்றபடி. (தம்விஷ்ணுசித்தம் - தம்விஷ்ணுசித்தம்) அப்ப
ஷ்டராய், விஷ்ணுவை எப்போதும் சித்தத்திலே யுடையரா
யென்கிறது. (கூ) "வில்லாண்டான்றன்னை வில்லிபுத்தூர்வி
தன் விரும்பியசொல்" என்று - அடியிலே தமக்கு நிரூபகம
வார் தாமேயருளிச்செய்தாரிறே. "விஷ்ணுசித்தம்" என்
(எ) "மின்னு நூல் விட்டுசித்தன் விரித்த" என்று - பெரி
திருமொழியடியிலும், (அ) "விட்டுசித்தன்மனத்தே கோயில்
கோவலனை" என்று - முடிவிலுமருளிச்செய்கையால், இந்த
மத்தாலே அந்த ப்ரபந்த ப்ரவக்தாவென்னுமதுவும் ஸூசிதம்
கும் தனியன் இதுவேயிறே. (அ) "அனந்தன்பாலும் கருடன்
ஐதுநொய்தாகவைத்து என்மனந்தனுள்ளேவந்துவைகி வாழ்
யெம்பிரான்" என்னும்படி இவர் திருவுள்ளத்திலே அத்யப
ஷ்டனுயிருக்குமாய்த்து. (விஷ்ணுசித்தம் - விஷ்ணுசித்தம்) (கூ
ணுநா வ்யபதேஷ்டவ்யராயிருக்கிறபடி. (கo) "மின்கோயில்
வைட்டணவன்" என்றாரிறே. அவனும் வைஷ்ணவ ஸம்ப
அபேக்ஷித்துக் கைப்பற்றினன். (தம்விஷ்ணுசித்தம் நமாமி

(க) தி-மொ-கக-ங-டு. (உ) தி-வாய்-ங-ச-கக. (ங) வை
(ச) பெரி-திரு-டு-ச-கக. (டு) தி-மொ-டு-கூ-எ. (கூ) தி-ப
(எ) பெரி-திரு-க-உ-கo. (அ) பெரி-திரு-டு-ச-அ.
(கூ) விஷ்வக்ஸேந ஸம்ஹிதை. (கo) பெரி-திரு-

ஞுசித்தம்நமாமி) அந்த விஷ்ணுசித்தரை (க) "கிழியறுத்தான்பாதங் கள் யாமுடையபற்று" என்னும்படி ஸேவிக்கிறேனென்கிறது. நமஸ் காரமும் ஸேவையும் பர்யாயம். (உ) "ஓம் நமோ விஷ்ணவே - ஓம் நமோ விஷ்ணவே" என்னுமது விஷ்ணுசித்தவிஷயத்திலேயாய்த்து; விசேஷஜ்ஞர்க்கு பகவத்விஷயத்திலே அரைவயிருய், இங்கேயிறே எல்லாம் பூர்ணமாவது. (ங) * நம்பி விட்டுசித்தரிறே. இத்தால் - ப்ரதம ப்ரபந்தாநுஸந்தாநதசையில் தத்வக்தாவான ஆழ்வாரை (ச) "...ம் வ...வ...வா...யேஷ - தம்பூர்வமபிவாதயேத்" என்று ப்ரத மம் திருவடிதொழும்படியைச் சொல்லிற்றாய்த்து. (க)

அவ.—(மின்னார்தடமதிளித்யாதி)இதில், ஸ்ரீ வில்லிபுத்தூர் பட்டர்பிரானென பெரியாழ்வா ரவதரணஸ்த்தலத்தை அநுஸந்திப்பார் திருவடிகளைத் தொழுகையிலுண்டான ப்ரீதியையும், அவர் செயலைச்சொல்லுகையாலுண்டான விரோதி நிவ்ருத்யாதிகளிலே த்ருப்தியையும் மாஸ்ஸோடே சொல்லி உலாவுகிறதாயிருக்கிறது. *

பாண்டிய பட்டரருளிச்செய்தது.

மூ.—மின்னார் தடமதிள்சூழ் வில்லிபுத்தூரென்றொருகால்
சொன்னார்கழற்கமலம் சூடினோம்—முன்னாள்
கிழியறுத்தானென்றுரைத்தோம் கீழ்மையினில் சேரும்
வழியறுத்தோம் நெஞ்சமே வந்து. ... ... (உ)

வ்யா.—(மின்னார்தடமதிள்சூழ்) தேஜஃப்ரசுரமான பெரியமதிளாலே சூழப்பட்ட வில்லிபுத்தூர். இத்தால் (ரு) * செம்பொனே ய்ந்த மதிளாயிருக்கை. ப்ரதிகூலர்க்குக் கிட்டவொண்ணுதபடியாய், அநுகூலர்க்குக் கண்டு வாழும்படியாயிருக்கை. கல்மதிள்போலே அத்தலைக்கு அரணாய், மங்களாசாஸநபரரான பெரியாழ்வார் இருக்குமூரில் மதிளிறே; ஏவம்விதமான மதிளாலே சூழப்பட்ட. (வில்லிபுத்தூரென்று ஒருகால்சொன்னார் கழற்கமலஞ்சூடினோம்) ஒருகாலாகிலும் ஸ்ரீவில்லிபுத்தூரை உச்சரித்த ஸ்ரீவைஷ்ணவர்களுடைய ஸ்ரீபாத கமலங்களை (சு) * பைங்கமலத்தண்டெரியலாகத் தலையிலே சூடினோம். (எ) "கோவிந்தன்றன்னடியார்களாகி யெண்டிசைக்கும் விளக்

(க) பெரி-திரு-தனி. (உ) விஷ்ணுஷடக்ஷரி. (ங) ந-தி-கங-கO.
(ச) (ரு) தி-வாய்-கூ-கO. (சு) தி-பா-ஙO.
(எ)பெரி-தி-உ-கூ-கக.

காகி நிற்பாரிணையடி யென் தலைமேலவே" என்றிறே ஆழ்வாரு மரு ளிச்செய்தது. ஸ்ரீவில்லிபுத்தூர்தான், வடபெருங்கோயிலுடைய னுக்கும் ஆழ்வார்க்கும் ஆண்டாளுக்கும் நிரூபகமான தேசமாய்த்து (க) "வில்லிபுத்தூருறைவான்" (உ) "வில்லிபுத்தூர்ப்பட்டர்பிரான்" (௩) "அன்னவயல் புதுவையாண்டாள்" (ச) கோதைபிறந்தவூர்-வில் லிபுத்தூர்" என்னக்கடவதிறே. ப்ரணவம்போலே மூவரும் கூடவி யிருக்கை. இப்படி உத்தேஶ்யமான ஊரை ஒருகால் அநுஸந்திப்பார் எப்போதும் முத்தேஶ்யராகையாலே, அவர்கள் ஸ்ரீபாதங்கள் ஶிரோபூ ஷணமாக தா(ர்)ர்யமென்கிறது; (ரு) "அரசமர்ந்தானடி சூடுமரசு" என்னுமாபோலே.

பின்னை விரோதிகள் செய்ததென்னென்னில்; (முன்னாள்கிழிய றுத்தானென்றுரைத்தோம் கீழ்மையினில்சேரும் வழியறுத்தோம்) முன்னாள் கிழியறுக்கையாவது-முற்காலத்திலே பாண்டியன் வித்யா சுல்கமாகக்கட்டின த்ரவ்யக்கிழியை, அங்கேசென்று, வேதாந்தார்த்த முகேந "விஷ்ணுவே பரதத்வம்" என்று விஷ்ணுசித்தரான தாம் வித்வஜ்ஜநங்களைவென்று த்ரவ்யக்கிழியையறுத்த ஆழ்வாருடைய இந்த அத்யத்புதகர்மத்தை அநுஸந்தித்தோம்; அத்தாலே கீழ்மை யினில்சேரும் வழியறுத்தோம். (சு) "ஜந்ம கர்ம ச மே திவ்யமேவம் யோ வேத்தி தத்த்வத: । த்யக்த்வா தேஹம் புநர்ஜந்ம நைதி மாமேதி ஸோऽர்ஜுந - ஜந்ம கர்மச மேதிவ்யமேவம் யோவேத்தி தத்வத: - த்யக்த்வா தேஹம் புநர்ஜந்ம நைதி மாமேதிஸோऽர்ஜுந என்று- க்ருஷ்ணவிஷயத்தில் ஜந்மகர்மங்கள் ஜந்மஸம்ஸாரபந்தத்தை அறுக்குமாபோலேயாய்த்து விஷ்ணுசித்தர் ஜந்ம கர்மங்களும். இங் கும், ஸ்ரீவில்லிபுத்தூர் ஜந்மமும், கிழியறுக்கை கர்மமுமாயிருக்கும். கீழ்மையினில்சேரும் வழியறுக்கையாவது-நிஷித்தக்ருத்யத்தாலே ப்ரா பிக்கும் ப்ரதிபந்தகமானமார்க்கத்தைச் சேதித்தோம். (எ) [புறநெறி களைகட்டு] அவைதிகமார்க்கத்தையடைகை பாபபலமிறே. (அ) "மெ ய்ம்மைப்பெருவார்த்தை விட்டுசித்தர்கேட்டிருப்பர்" என்று - இவர் தாம் ஸந்மார்க்கவர்த்திகளிறே. அன்றிக்கே, "கீழ்மையினில்சேரும் வழி"என்று-அத:(பத)பதநத்திலே ப்ராப்தமான மார்க்கமென்று-அர்த்

(க) நா-தி-௫-௫. (உ) (௩) தி-பா-தனி.
(ச) முக்தகம். (ரு) பெரு-திரு-க0-எ. (சு) கீ-ச-க.
(எ) தி-வாய்-க-௩-௫. (அ) நா-தி-கக-க0.

சிராதிமார்க்கத்துக்குக் கீழாய், புநராவ்ருத்தி லக்ஷண ஹேதுவான தூமாதி மார்க்கத்ரயத்தையும் நிரோதித்தோம். (நெஞ்சமேவந்து)(க) *நெறிநின்ற நெஞ்சாய், நீ அநுகூலிக்கையாலே இந்த லாபத்தை லபித்தோம். (வந்து) இவ்வளவும் வந்து; ஆழ்வாரளவும்வந்து. வில்லிபுத்தூரென்றொருகால் சொன்னார்கழற்கமலம்சூடினோம்; கீழ்மையினில்சேரும் வழியறுத்தோம்; இதுவன்றோ நீ அநுகூலித்ததால் பெற்றபேறு; நீ என்வழி வருகையாலே இவையெல்லாம் பெற்றோம். இஷ்டப்ராப்தியோபாதி அநிஷ்ட நிவாரணமும் ப(ஃ)லமிறே. (நெஞ்சமேவந்து) (உ) "நெஞ்சமே நல்லை நல்லை உன்னைப்பெற்றாலென்செய்யோ மினியென்ன குறைவினம்" என்றாப்போலே பெற்ற பேற்றைப்பேசி நெஞ்சோடே ஹர்ஷிக்கும்படியைச் சொல்லுகிறது. "வில்லிபுத்தூரென்று ஒருகால்சொன்னார்" என்றது-(௩) "வண்டின்னிசைக்கும் வில்லிபுத்தூர்" என்றும், (ச) "மென்னடை யன்னம் பரந்து விளையாடும் வில்லிபுத்தூர்" என்றும் பகவத்விஷயத்திலே தமப்பனாரும் மகளாரும் ஒருகால் சொன்னாப்போலே, பாகவதவிஷயமாக ஒருகால் சொன்னாரென்றபடி. ஸம்பந்தாநுஸந்தாநம் ஸக்ருத்தென்றபடி.

அவ.—(பாண்டியன் கொண்டாட) இதில், ப்ரபந்தவக்தாவான பெரியாழ்வார் திருவடிகளில் உபாய ஸ்வீகாரத்தைச் சொல்லுகிறது.

மூ.—பாண்டியன் கொண்டாடப் பட்டர்பிரான் வந்தானென்
ஈண்டிய சங்க மெடுத்தோத—வேண்டிய
வேதங்களோதி விரைந்து கிழியறுத்தான்
பாதங்கள் யாமுடைய பற்று. (உ)

வ்யா.—(பாண்டியன்கொண்டாட) (ரு) "தென்னன் கொண்டாடும்" என்னுமாபோலே "நமக்கு பரதத்வநிர்ணயம் பண்ணித்தரும்படி பட்டர்பிரான் வந்தான்" என்று பாண்டியனான ஸ்ரீவல்லபதேவன் சொல்லிக்கொண்டாட. அத்தசையிலே (ஈண்டியசங்கமெடுத்தோத) திரண்டிருக்கிற வித்வத்ஸங்கமானது, ஒரோப்ரதேசங்களிலே ஓதிக் கிடக்கிற ப்ரஹ்மஸ்பரவாக்யங்களை எடுத்து ப்ரஹ்ம ருத்ராதிகளைப் போரப்பொலியச்சொல்லி உபந்யஸிக்கவென்னுதல்; (ஈண்டியசங்கம்

(க) க-திரு-அ௯. (உ) தி-வாய்-க-௧௦-ச. (௩) உ-உ-௬.
(ச) நா-தி-ரு-ரு. (ரு) ச-உ-எ.

மடுத்தூத) என்று - ஜயசங்கங்கள் பலவற்றையும் வாயிலே மடுத்து ஊதவென்னுதல். (க) "பூங்கொள் திருமுகத்து மடுத்தூதிய சங்கொலி" என்னக்கடவதிறே. (எடுத்தூத) என்றபோது - சங்கத்தை எடுத்து வாயாலே ஊதவென்றபடி. (அடுத்தூத) என்றபோது - கிட்டி ஊதவென்றபடி.

அதிக்ஷேபித்த வித்வான்கள் வாயடைக்கும்படி (வேண்டிய வேதங்களோதி) (உ) "ஸர்வே வேதா யத்பத மாமநந்தி - ஸர்வே வேதா யத்பத மாமநந்தி" (ங) "வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்ய: - வேதைஶ்ச ஸர்வைரஹ மேவ வேத்ய:" என்கிறபடியே வேதங்களெல்லாவற்றாலும் ஆராதநப்ரகாரத்தையும் ஆராத்ய வஸ்துவையும் சொல்லுகிறதென்றறுதியிட்டு, பகவத்பரத்வத்தை ஸாதித்து இனித்†தாழுகைக்கு ஹேதுவென்? என்று திருவடிகளிலே தாழ்ந்த கிழியை, த்வரித்து அறுத்தவருடைய - த்ரவ்யக்ரந்தியை அறுத்தவருடைய. (பாதங்கள்) கிழியறுத்த பட்டர்பிரான் பாதங்கள். (யாமுடையபற்று) "பட்டர்பிரானடியேன்" என்னும்படி அவர்க்கு சேஷபூதராயிருக்கிற நம்முடைய ரக்ஷை. (ச) "தகையான்சரணம் தமர்கட்கோர்பற்று" என்கிற பொதுவானவனுடைய திருவடிகளன்று, (ரு) * அவனைப்பல்லாண்டென்று காப்பிடும் பான்மையன்தாள். (யாமுடையபற்று) நம்முடைய, அரண் - புகல் - உபாயம்; சரண்யமென்றபடி. (யாமுடையபற்று) - பற்றற்ற நம்முடைய பற்று. (சா) "பற்றிலார் பற்ற நின்றான்" என்னக்கடவதிறே.

தனியன்கள் வ்யாக்க்யாநம் முற்றிற்று.

—oo:o:oo—

பிள்ளைலோகார்ய ஜீயர் திருவடிகளே சரணம்.



(க) நா-தி-௧0-௬. (உ) கட-வ-உ-௧ரு. (ங) கீதை-௧ரு-௧ரு.
(ச) தி-வாய்-௧0-௩-௧0. (ரு) இரா-நூ-௧ரு. (சா) தி-வாய்-எ-உ-எ.
† தாழ்கை-விலம்பிக்கை.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

# பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்த திருப்பல்லாண்டு வ்யாக்க்யாநாவதாரிகை.

(க) "பதிம் விஶ்வஸ்யாத்மேஶ்வரம் - பதிம் விஶ்வஸ்யாத்மேஶ்வரம்" என்றும், (உ) "தமீஶ்வராணாம் பரமம் மஹேஶ்வரம் - தமீஶ்வராணாம் பரமம் மஹேஶ்வரம்" என்றும் - ஸர்வஸ்வாமியாகவும் ஸர்வநியந்தாவாகவும் ஸர்வேஶ்வரன் ஸ்வரூபத்தை நிர்ணயித்து, சேதநஸ்வரூபத்தை (௩) "யஸ்யாஸ்மி - யஸ்யாஸ்மி" என்றும், (௪) "பரவாநஸ்மி - பரவாநஸ்மி" என்றும், (௫) "தாஸோஹம் வாஸுதேவஸ்ய - தாஸோஹம் வாஸுதேவஸ்ய" என்றும், (௬) "தாஸபூதாஸ்ஸ்வதஸ்ஸர்வே - தாஸபூதாஸ்ஸ்வதஸ்ஸர்வே" என்றும் நிரூபித்து, இந்தஸ்வரூபாநுரூபமான ஜ்ஞாநமும் ஜ்ஞாநாநுரூபமான

---

அநு.—பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை, ஸ்வாசார்யநியமநத்தாலே திருவாய்மொழிக்கு இருபத்துநாலாயிரமாக ஒரு வ்யாக்க்யாநம்செய்தருளி, பின்புள்ளவையான இருபத்துமூன்று திவ்யப்ரபந்தங்களுக்கும் (௭) *பெரிய வ்யாக்கியைகள் செய்வதாகத் திருவுள்ளம்பற்றி, (௮) *வேதத்துக்கு ஓமென்னுமதுபோல் உள்ளதுக்கெல்லாம் சுருக்கான திருப்பல்லாண்டுக்கு வ்யாக்க்யாநம் செய்தருளக்கோலி, வக்த்ருவைலக்ஷண்ய பூர்வகமாக இப்ப்ரபந்த வைபவத்தைப் பலபடியாலும் உபபாதித்துக்கொண்டு, ப்ரதிபாத்ய வைலக்ஷண்யத்தையும் சுருங்க வருளிச்செய்கிறார். "பதிம்விஶ்வஸ்ய" இத்யாதி, "மேலிற்பாட்டு பலஶ்ருதி" என்னுமளவும்.

அதில், சேதநோஜ்ஜீவநார்த்தமாகப் பெரியாழ்வாரை ஸர்வேஶ்வரன் அவதரிப்பித்தருளினனென்றருளிச்செய்யத் திருவுள்ளம்பற்றி, அதிஷ்டிகை யிடுகிறார் (பதிம்விஶ்வஸ்யேத்யாதி). எடுத்த ஶ்ருதிக்கர்த்தம் - (ஸர்வஸ்வாமியாகவும் ஸர்வநியந்தாவாகவும்) என்றது. (ஸ்வரூபாநுரூபமான ஜ்ஞாநமாவது) - ஶேஷபூதனுக்கு ஶேஷிபக்கல் கைங்கர்யமே கர்த்

---

(க) தை-நா-கக. (உ) ஶ்வேதாஶ்வ-௬. (௩) யஜு-அஷ்ட-௩-ப்ர-௭.
(௪) ரா-ஆர-கடு-௭. (௫) (௬) ஹாரீதஸ்ம்ருதி.
(௭) உ-தே-ர-௩௬. (௮) உ-தே-ர-௩௯.

வ்ருத்தமும் ப்ராப்தமாயிருக்க, அயஃபிண்டத்துக்கு அக்நிஸம்ஸர்க் கத்தால்வந்த தாதாத்ம்யம்போலே, சேதநர் அசித்ப்ரத்யாஸத்தியாலே, "தேவோऽஹம், மநுஷ்யோऽஹம்" என்று அஹங்கரித்து, புத்ரமித் ராதிகள் பக்கலிலே மமதாபுத்தியைப்பண்ணி, இப்படி ப்ரவாஹ ரூபேண நித்யமான அஹங்கார மமகாரங்களாலே ஸர்வேஶ்வரகத மான ஸ்வாமித்வ நியந்த்ருத்வங்களைத் தங்கள் பக்கலிலே அத்யவ ஸித்து, ஸ்வதஃப்ராப்தமான பாரதந்த்ர்யத்தில் விமுகராய் அதஏவ சப்தாதி விஷய ப்ரவணராய், அத்தால்வந்த ராகத்வேஷாதிகளாலே அபிபூதராய்ப்படுகிற துஃக்கபரம்பரைகளை அநுஸந்தித்து, நிருபா திக சேஷியான ஸர்வேஶ்வரன், "ஶாஸநாச்சாஸ்த்ரம் - ஶாஸநாச் சாஸ்த்ரம்" என்கிறபடியே தத்வ ஹிதங்களை அறிந்து நல்வழி போ கைக்குடலாக சாஸ்த்ரத்தை ப்ரகாசிப்பித்தருளினான்; (௧) "ஹார்த்தம் தமஸ்ஸதஸதீச விவேகதீஶோ மாநம் ப்ரதீபமிவ காருணிகோ ததாதி - ஹார்த்தும் தமஸ்ஸதஸதீச விவேகதுமீசோ மாநம் ப்ரதீ மிவ காருணிகோ ததாதி" என்னக்கடவதிறே.

இந்த சாஸ்த்ர ப்ரதா(ன)நமும் வாஸநாதூஷிதமாகையாலே அகி ஞ்சித்கரமாக, ஓலைப்புறத்திற்செல்லாத தேசத்திலே எடுத்துவிடும்

---

தவ்யமென்கிற ஜ்ஞாநமென்கை. (வ்ருத்தமும்) என்ற வநந்தரம் "தங்க ளுக்குண்டாம்படி அர்த்திக்க" என்று ஶேஷம். (தாதாத்ம்யமாவது) - அபேதபுத்தி. (சேதநர்) என்றது - கீழும்மேலும் அந்வயிக்கிறது. (அஹங் கார மமகாரங்களாலே) என்றது - அஹங்கார மமகாரஹேதுவான அசித் ப்ரத்யாஸத்தியாலே யென்றபடி. உக்தார்த்தத்துக்கு ப்ரமாணம் (ஹார்த் து மித்யாதி). (ஸதஸதீ) - நல்லதும் தீயதும்.

(௨) "ஜந்மாந்தர ஸஹஸ்ரேஷு யாபுத்திர்பாவிதா ந்ருணாம் । தாமேவ பஜதே ஜந்துருபதேஶோ நிரர்த்தகஃ - ஜந்மாந்தர ஸஹ ஸ்ரேஷு யாபுத்திர்பாவிதா ந்ருணாம் । தாமேவ பஜதே ஜந்து ருபதே ஶோ நிரர்த்தகஃ" என்கிற வசநத்தையுட்கொண்டு அருளிச்செய்கிறார் (இந்த ஶாஸ்த்ரப்ரதாநமு மித்யாதி) (அகிஞ்சித்கரம்) என்றது - அநேக விஷயங்களில் அகார்யகரமென்றபடி. (எடுத்துவிடுகையாவது) - ஸே

---

(௧) ரஹஸ்த-உ-சக. (௨)

ராஜாக்களைப்போலே ராமக்ருஷ்ணாதிரூபேண வந்தவதரித்து, (க) "விதஃபூவந நிரேூஶாஸவாஇாஜஸ்ரு ஶாஸநாஸ-பிதுர்வசந நிர்த்தேஶாத் பரத்வாஜஸ்ய ஶாஸநாத்" என்று- பித்ருவசந பரிபாலநாதிகளை ஆசரித்தருளியும், இளையபெருமாளை நியமித்து, "வகுத்த விஷயத்தில் சேஷவ்ருத்தியே இவ்வாத்மாவுக்கு ஸ்வரூபம்" என்னுமிடத்தை ப்ரகாசிப்பித்தருளியும், (உ) "ராஜ்யஞ்சாZஹஞ்ச ராமஸ்ய- ராஜ்யஞ்சாZஹஞ்ச ராமஸ்ய" என்று கொண்டு இந்த வ்ருத்திக்கடியான பாரதந்த்ர்யத்தை ஸ்ரீபரதாழ்வானையிட்டு ப்ரகாசிப்பித்தருளியும், இப்பாரதந்த்ர்யகாஷ்ட்டையை, (ங) "ம்ஹ்தா ஊாதஃமகஃமூ ஶாதேந - நீதஃ - சச்சதா மாதுலகுலம் பரதேந - நீதஃ" என்று கொண்டு ஸ்ரீசத்ருக்நாழ்வானையிட்டு ப்ரகாசிப்பித்தருளியும், க்ருஷ்ணனாய்வந்தவதரித்து தூத்யஸாரத்யங்களை ஆசரித்தருளியும், (ச) "யஜ்ஜுாவாதி ஶ்ரேஷ்ஃ- யத்யதாசரதி ஶ்ரேஷ்ட்டஃ" என்று- "ஶ்ரேஷ்ட்ட ஸமாசாரம் கர்த்தவ்யம்" என்று உபதேசித்தருளியும், இப்படி பஹுப்ரகாரத்தாலே ஆத்மாக்களுடைய பாரதந்த்ர்யத்தை ப்ரகாசிப்பித்தருளின விடத்திலும், பெரியவன் தாழநின்று ஆசரித்த இம்மஹாகுணத்திலே (ரு) "அவஜாநந்தி மாம் மூடாஃ - அவஜாநந்தி மாம் மூடாஃ" என்கிறபடியே அநீஶ்வரத்வமாகிற தோஷத்தை ஆவிஷ்கரித்துக் காற்கடைகொள்ளுகையாலே அவையும் கார்யகரமாய்த்தில்லை. "இனி, நாம் பார்வைவைத்து ம்ருகம் பிடிப்பாரைப்போலே ஸஜாதீய

நையைத்திரட்டிக்கொண்டு போகை. பெருமாள் ஸாமாந்யதர்மநிஷ்ட்டரென்று தோற்றுகைக்காக (வகுத்த விஷயத்தில்) என்றது. (என்று கொண்டு) என்றது - என்று சொல்லப்பட்டுக்கொண்டிருக்கிற வென்றபடி. இளையபெருமாளை வ்யாவர்த்திக்கைக்காக (இந்த வ்ருத்திக்கடியான பாரதந்த்ர்யம்) என்றது. (இந்தவ்ருத்தி) - அதிலுக்கைப்போலே யிருக்கை. ஸ்ரீபரதாழ்வானிலும் ஆதிக்யந்தோற்ற (இப்பாரதந்த்ர்ய காஷ்ட்டை) என்றது. (அவஜாநந்தி) அவஜ்ஞாம் குர்வந்தி. இத்தைப்பற்ற (காற்கடை கொள்ளுகையாலே) என்றது. "மூடாஃ" என்கிறத்தைப்பற்ற (கார்யகரமாய்த் தில்லை) என்கிறது. (பார்வை) என்கிறது - ம்ருகம்பிடிக்க ஸாதநமாக வைத்த ம்ருகம். "பார்வைவைத்து ம்ருகம்பிடிப்பாரைப் போலே" என்கிற த்ருஷ்டாந்தபலத்தாலே, ஆழ்வாருடைய அவதாரம்

(க) ரா-பா-க-உச. (உ) ரா-அ-அஉ-கஉ. (ங) ரா-அயோ-க-க.
(ச) கீதை-ங-உக. (ரு) கீதை-கூ-கக.

முகத்தாலே சேதநரை வசீகரிக்கவேணும்" என்று பார்த்தருளி, பெரியாழ்வாரை அவதரிப்பித்தருளினான்.

இவ்வாழ்வார், ஸஹஜதாஸ்யத்தை யுடையராகையாலே "பகவத்விஷயத்திலே கிஞ்சித்கரித்து காலக்ஷேபம்பண்ணவேணும்" என்று பார்த்தருளி, அதுசெய்யுமிடத்தில் "அவனுகந்த அடிமையே கர்த்தவ்யம்" என்று அநுஸந்தித்து, அவதாரங்களை ஆராய்ந்தவிடத்தில், கம்ஸனுக்குப் பணிசெய்துபோந்த மாலாகாரர் க்ருஹத்திலே எழுந்தருளிப் பூவை இரந்து, அவன்றான் (க) "ப்ரஸாதபரமௌ நாதௌ மம கேஹமுபாகதௌ - தந்யோऽஹமர்ச்சயிஷ்யாமீத்யாஹ மால்யோபஜீவந:" என்று உகந்து சூட்டச் சூடினபடியை அநுஸந்திக்கையாலே "இவ்விஷயத்துக்குப் பூவிடுகையொழிய வேறு கர்த்தவ்யமில்லை நமக்கு" என்று திருநந்தவநம் செய்கையிலே உத்யோகித்தா ரொருவரிறே.

இன்னமும், மற்றையாழ்வார்களிற் காட்டில் இவர்க்கு வெனாசியுண்டு;—அவர்கள், தந்தாமுடைய ஸம்ருத்திகளை எம்பெருமானாலே

---

கார்யகரமென்று தோற்றுகிறது. இத்தால் - சாஸ்த்ரங்களாலும் அவதாரங்களாலும் திருந்தாதாரும் ஆழ்வாராலே திருந்தினார்களென்று வைபவம் சொல்லிற்றாய்த்து.

ஆக, ஸர்வேஶ்வரன் ஆழ்வாரை அவதரிப்பித்து சேதநரை வசீகரிக்கப்பார்த்தான் என்றார் கீழ், இப்படி ஆழ்வாராலே சேதநர் திருந்துகைக்கு இவ்வாழ்வார்க்குள்ள ஏற்ற மென்னென்ன வருளிச்செய்கிறார் (இவ்வாழ்வாரித்யாதி). (உ)"ஏழாட்காலும் பழிப்பிலோம் நாங்கள்" என்றிருக்கையாலே, (ஸஹஜதாஸ்யத்தை யுடையராகையாலே) என்றது. (அவனுகந்த அடிமை) என்கையாலே, ஸ்வார்த்த கைங்கர்யபரரை வ்யாவர்த்திக்கிறார். (அவதாரங்களை) இத்யாதிக்குக்கருத்து - ராமாவதாரத்தில் கிஞ்சித்கரித்த ஸுக்ரீவாதிகள் ஸ்வார்த்தபரராகையாலும், இளையபெருமாள் தாமே பின்றொடருகையாலும், வாமநாவதாரத்தில் மஹாபலி, அவனிரந்தபோது நீர்வார்த்துக்கொடுத்து ஔதார்யம் பெற்றுப்போகையாலும், இவ்வவதாரத்தில், அநந்யபரனை தன்னை அவனிரக்கத்தானுகந்து பூவிட்டானென்கிறது ஏற்றமிறேயென்று பூவிடுகையிலே தாமுமுத்யோகித்தாரென்று.

(ங) "தனக்கேயாக வெனைக்கொள்ளுமீதே" என்கிற மற்றையாழ்வார்களிலும் இவருக்கு ஏற்ற மருளிச்செய்கிறார்(இன்னமுமித்யாதி). வாசிதன்னை உபபாதிக்கிறார் (அவர்களித்யாதி). (தந்தாமுடைய ஸம்ருத்திகள்)

---

(க) வி-பு-டு-ககூ-உக. (உ) க-ங. (ங) தி-வாய்-உ-கூ-ச.

பெற நினைத்திருப்பர்கள், இவர், தம்மை அழியயாறிவரும் பகவத் ஸம்ருத்தியையே தமக்குப் புருஷார்த்தமாக நினைத்திருப்பர். அவர் கள், ஈஶ்வரனைக் கடகாகப்பற்றித் தந்தாமுடைய பயநிவ்ருத்தியைப் பண்ணுகிற்பர்கள்; இவர், தாம் கடகாகநின்று "அவனுக்கு என்வருகி றதோ!" என்று பயப்பட்டு அந்த பயநிவ்ருத்தியிலே யத்நம் பண்ணு கிற்பர்.

இப்படி மற்றையாழ்வார்களிற் காட்டில் இவர்க்குண்டான நெடு வாசிபோலே, மற்றை ப்ரபந்தங்களிற் காட்டில் திருப்பல்லாண்டுக்கு நெடுவாசியுண்டு;—வேதமென்ன, ததுபப்ரும்ஹணமான இதிஹாஸ புராணங்களென்ன, இவைபோலே அதிக்ருதாதிகாரமாயிராது; ஸர்வா திகாரமான திருவாய்மொழியிலுண்டான அருமையும் இதுக்கில்லை;- (க) "அரியயனரனென்னுமிவரை" (உ) "ஒன்றநும்மனத்துவைத்து" என்றும், (௩) "முனியேநான்முகனே முக்கண்ணப்பா" என்றும் உப க்ரமம் தொடங்கி உபஸம்ஹாரத்தளவும் செல்ல த்ரிமூர்த்திஸாம் யத்தை யருளிச்செய்கையாலே, (ச) "ஐயோ விஷ்ணுமிஶம் வா-ய

என்றது- அநுபவ கைங்கர்யங்களால் தங்களுக்குண்டான தழைப்பு. (பக வத்ஸம்ருத்தி) என்றது - மங்களாஶாஸநத்திலுண்டான தழைப்பு. இவ் வாசிதன்னை முகபேதேந விவரிக்கிறுர் (அவர்கள் ஈஶ்வரனையித்யாதி). (கடகாக) - பரிசையாக; - ரக்ஷகமாக வென்றபடி.

ஆக, வக்த்ருவைலக்ஷண்யத்தை யருளிச்செய்தாராய், இத்தை த்ருஷ் டாந்தமாகக்கொண்டு ப்ரபந்த வைலக்ஷண்யத்தைப் பலபடியாக அரு ளிச்செய்கிறுர் (இப்படி மற்றையித்யாதி). வாசி எட்படி யென்ன (வேத மித்யாதி). அதிக்ருதா: - அதிகாரிண:, த்ரைவர்ணிகாமதிகாரோ யஸ்மிந்நிதி விக்ரஹ:. ஆனுல், ஸர்வாதிகாரமாகத் திருவாய்மொழியுண்டே, இதுக்கு அதிலும் அதிசயமென்னென்ன, (ஸர்வேத்யாதி). அதுக்கு அருமையே தென்ன ( அரியய னித்யாதி ). "ஒன்றநும்மனத்துவைத்து" என் றது, (உ) "நன்றெழில் நாரணன் நான்முக னரனென்னுமிவரை" என் றத்தைக் கடாக்ஷித்து. இந்தப்பாசுராந்தரத்தையும் சேர்த்துஎடுத்தது, அப்யாஸம் தோற்றுகைக்காக. (த்ரிமூர்த்தி ஸாம்யத்தை யருளிச்செய்கை யாலே) என்றது - நிஷேதிக்கைக்கு ப்ரஸக்திரூபேண ஸாம்யம் சொல்லு கையாலே யென்றபடி. (க) "மனப்பட்டதொன்றே" என்ற விடத்திலும் (உ) "இருபசையறுத்து" என்றவிடத்திலும், (௩) "முனியே" என்ற விடத்

(க) தி-வாய்-க-௩-அ. (உ) திவாய்-க-௩-எ. (௩) திவாய்-கO-கO-க. (ச) ர-ஸ்த-உ-ருக.

ஊவதாரஃ - மத்யே விரிஞ்சகிரிஶம் ப்ரதமாவதாரஃ" என்று ரகுகுல ஸஜாதீயனாயும் யதுகுல ஸஜாதீயனாயும் அவதரித்தாப்போலே, ப் ஹ்மருத்ரர்கள் நடுவே வந்தவதரிக்கையாலே வந்த ஸாம்யமென்று நிர்வஹிக்கவேண்டும் அருமையாதல், (க) "நீராய் நிலனாய்" என்று தொடங்கி,(க) "சிவனாயயனானாய்" என்று-சேதநாசேதநவாசி (வாசி சப்தங்களோடே ஸமாநாதிகரிக்கையாலே, ஸாமாநாதிகரண்யத்துக்கு நிபந்தநம் ஈஸ்வரனோடு சேதநாசேதநங்களுக்குண்டான ப்ருதக்ஸ்த் தித்யுபலப்தியில்லாத ஸம்பந்தமென்றே நிர்வஹிக்கவேண்டு மருமை யாதலில்லை இப்ப்ரபந்தத்துக்கு.

இன்னமும், மஹாபாரதம்போலே பெரும்பரப்பாய், "இன் னதுசொல்லிற்று" என்று நிர்ணயிக்கவொண்ணாதாயிருக்கும் குறைய மின்றிக்கே, ப்ரணவம்போலே சப்தம் அத்யல்பமாய், ஸகல வேதா த்தமும் அதுக்குள்ளே காணவேண்டி, அது தெரியாதே தேடவேண் டிவரும் அந்தக்குறையுமின்றிக்கே, பன்னிரண்டுபாட்டாய், ஐஶ்வர் கைவல்யங்களை நீக்கி உத்தம புருஷார்த்தமான பகவத்கைங்கர்யத்தை ஸங்க்ரஹமாக ப்ரதிபாதிக்கையாலே இதுக்கு நெடுவாசியுண்டு. — இன்னமும், இப்ப்ரபந்தம், தன்னை அதிகரித்தவன்கையிலே பரத த்வத்தைக் கைப்படுத்தவல்ல சக்தியையுடைத்தாகையாலே வந்த ஏற்ற

திலும் ஸாம்யவிஶேஷதம் அர்த்தஸித்தமிறே. (உ)"அரியயன்" இத்யாத்யம் ஶத்தில் ஸாம்யப்ரஸக்திக்கு நிர்வாஹம் காட்டுகிறார் (மத்யேவிரிஞ்சகிர் ஶம்) என்று. இது முழுச்சொல்லு, அவ்யயம்; விரிஞ்சகிரிஶயோஃ-( யே) - விரிஞ்சகிரிஶயோர்மத்யே என்றபடி. "முனியே நான்முகனே" என்ற விடத்தில் ஸாமாநாதிகரண்யத்துக்கு நிர்வாஹம் காட்டுகிறார் (நீரா யித்யாதி). (ஸாமாநாதிகரண்யத்துக்கு) "முனியேநான்முகனே" என்ற தில் ஸாமாநாதிகரண்யத்துக்கென்றபடி. (ப்ருதக்ஸ்த்தித்யுபலப்தியா வது) - பிரிந்திருக்கையும், பிரிந்து தோன்றுகையும்.

அதிவிஸ்தர அதிஸங்க்ரஹங்களாகையாலே வந்த துர்ஜ்ஞேயதையும் இதுக்கில்லை, அநதிவிஸ்தர ஸங்க்ரஹமாயிருக்குமென்கிறார்(இன்னமுமித் யாதி).(ஐஶ்வர்யகைவல்யங்களை நீக்கி) என்றதுக்கு-(ங)"கூழாட்பட்டுநின் றீர்களை-புகுதலொட்டோம்" என்றதிலேநோக்கு. (பகவத்கைங்கர்யத்தை) என்றதுக்கு - (ங) "மண்ணும் மணமுங்கொண்மின்" என்றதிலேநோக்கு.

(க) திவாய்-ள-கூ-க. (உ) தி-வாய்-ரு-ங-ள. (ங) க-ங.

முழுண்டு;—(க) "பரமாத்மனைச் சூழ்ந்திருந்தேத்துவர் பல்லாண்டு, என்றிறே இதுக்குப் பலம்.

இப்ப்ரபந்த மவதரித்தபடி யென்னென்னில்; ஸ்ரீவல்லபதேவனென்கிற ராஜா, தார்மிகனுகையாலே, புரோஹிதரான செல்வநம்பியை, "புருஷார்த்த நிர்ணயபூர்வகமாக அத்ருஷ்டஸித்திக்கு விரகென்?" என்ன; (க) " 'யஜ்ஞவிஸமயஃ ப்ரமாணம் - தர்மஜ்ஞஸமயஃ ப்ரமாணம்' என்கிறபடியே, வித்வான்களைத்திரட்டி வேதார்த்த நிர்ணயத்தைப்பண்ணி அவ்வழியாலே புருஷார்த்தம் பெறவேணும்"என்று சொல்ல; அவனும் அப்படியே பஹு த்ரவ்யத்தை வித்யாசுல்கமாகக்கட்டி வித்வான்களை ஆஹ்வாநம்பண்ணிச் செல்லுகிறவளவிலே, வடபெருங்கோயிலுடையான், ஆழ்வாரை இடுவித்து லோகத்திலே

உண்டென்கைக்கு நியாமகமெங்ஙனே யென்ன, (பரமாத்மனை இத்யாதி).

ஆக ஸர்வாதிகாரமாயும், நிர்வஹிக்கவேண்டும் அருமையுமின்றிக்கே, பன்னிரண்டு பாட்டாகையாலே ஸுக்ரஹமாயும், நிரதிஶயபலப்ரதாநஸமர்த்தமாயுமிருக்குமென்றருளிச்செய்து; இனிஇந்த திவ்யப்ரபந்தம் அவதரித்த ப்ரகாரத்தால் வந்த வைபவத்தை அருளிச்செய்யக்கருதி, தஜ்ஜிஜ்ஞாஸுப்ரஶ்நத்தை அநுவதிக்கிறுர் (இப்ப்ரபந்தமித்யாதி). இதுக்குத்தரமாக முன்கதையை அருளிச்செய்கிறுர் (ஸ்ரீவல்லபேத்யாதி). (தார்மிகனுகையாலே) என்ற வநந்தரம், சிறியதைப்பெரியது நலியாதபடி. கூடலென்கிற மதுரையிலிருந்து ராஜ்யம்பண்ணுகிற காலத்திலே, நகரஶோதநார்த்தமாக வருகிறவளவிலே, ஒரு ப்ராஹ்மணன் அங்கொரு திண்ணையிலே கிடக்கக்கண்டு, ராஜாவும் அவனைஎழுப்பி, "நீயார்" என்று கேட்க, அவனும்,"நான் ஒரு ப்ராஹ்மணன், கங்கையாடிவருகிறேன்"என்ன; "ஆனுலுனக்குப் போவதுண்டாகில் ஒரு ஶ்லோகம் சொல்லிக்காணுய்" என்ன; ப்ராஹ்மணனும் (ங) "வர்ஷார்த்தமஷ்டௌ ப்ரயதேத மாஸாந் நிஶார்த்தமர்த்தம் திவஸம் யதேத । வார்த்தக்யஹேதோர் வயஸா நவேந பரத்ர ஹேதோரிஹ ஜந்மநா ச - வர்ஷார்த்த மஷ்டௌ ப்ரயதேத மாஸாந் நிசார்த்த மர்த்தம் திவஸம் யதேத । வார்த்தக்ய ஹேதோர் வயஸா நவேந பரத்ர ஹேதோ ரிஹ ஜந்மநாச"என்கிற ஶ்லோகத்தைச் சொல்ல, ராஜாவும் இத்தைக்கேட்டு, வ்யுத்பந்நனுகையாலே"த்ருஷ்டத்தில் நமக்குக் குறையொன்றுமில்லை, அத்ருஷ்டயத்நம் பண்ணும்படி எங்ஙனே" என்று வ்யாகுலாந்தஃகரணனுய் என்று இவ்வளவும் கூட்டிக்கொள்வது. (வடபெருங்கோயிலுடையான்) வடதளத்தைப் பெரியகோ

(க) க-கஉ. (உ) ஆபஸ்தம்பஸூ. (ங) முக்தகம்.

வேததாத்பர்யத்தை ப்ரகாசிப்பிக்கைக்காக, "நீர்போய் கிழியையறுத்துக்கொண்டுவாரும்" என்று அருளிச்செய்ய; "அது வித்யாசுல்கமாக நிர்மித்தமொன்றன்றோ, கையில் கொட்டுத்தழும்பைக் காட்டிக் கிழியையறுக்கலாமோ?" என்ன; "அது உமக்கு ப(ர)ரமோ? நாமன்றோ வேதார்த்த ப்ரதிபாதநத்துக்குக்கடவோம்" என்று ஆழ்வாரை நிர்ப்பந்தித்தருள; ஆழ்வாரும், பாண்ட்ய வித்வத்கோஷ்டியிலே எழுந்தருளினவளவிலே செல்வநம்பியும் ராஜாவும் அப்யுத்தாநப்ரணாம பூர்வகமாக பஹுமாநம்பண்ண, அத்தைக்கண்ட வித்வான்கள், ராஜாவை அதிக்ஷேபிக்க; அவ்வளவிலே, செல்வநம்பி ஆழ்வாரைத் தெண்டனிட்டு, "வேதாந்ததாத்பர்யமான புருஷார்த்தத்தை யருளிச்செய்யலாகாதோ?" என்ன; ஆழ்வாரும் (க) "தத்ஸர்வம் யதாவீர்யேண யதாவத்ஸம்ப்ரபஶ்யதி - தத்ஸர்வம் தர்மவீர்யேண யதாவத் ஸம்ப்ரபஶ்யதி" என்று - ஸ்ரீவால்மீகிபகவாந் ஸர்வார்த்தங்களையும் ஸாக்ஷாத்கரித்தாற்போலேயும், ஸ்ரீபாஞ்சஜந்ய ஸ்பர்சத்தாலே த்ரு(த்ரு)வன் ஸர்வஜ்ஞனைப்போலேயும், பகவத்ப்ரஸாதத்தாலே ஸகல வேதார்த்தங்களையும் ஸாக்ஷாத்கரித்து, வேதாந்த தாத்பர்யமான அர்த்தத்தை ப்ரதிபாதித்தருள; அதிக்ஷேபித்த வித்வான்களோடு அநுவர்த்தித்த ராஜா

யிலாக வுடையவன்; ஸ்ரீவில்லிபுத்தூர் ஸ்வாமியைச்சொன்னபடி. (ப்ரகாசிப்பிக்கைக்காக) என்ற அநந்தரம், இவருக்கு ஸ்வப்நத்திலே எழுந்தருளியென்று சேஷம். (கொட்டுத்தழும்பு) திருக்கைகளில் கிணங்கள். (கொட்டு) களைக்கொட்டு. (கிழியை) முடிப்பை. (ஆழ்வாரும்) என்ற வநந்தரம் "இதொரு ஸ்வப்நமிருந்தபடி என்!" என்று விஸ்மிதராய் விஶ்வஸித்து என்று சேஷம். (ஸ்ரீபாஞ்சஜந்ய ஸ்பர்ஶத்தாலே) என்றவிடத்தில், (உ) "ஶங்கப்ராந்தேந கோவிந்தஸ்தம் பஸ்பர்ஶ க்ருதாஞ்ஜலிம் । உத்தாந பாததநயம் த்விஜவர்ய ஜகத்பதி: । தத: ப்ரஸந்நவதந: ஸ தத்க்ஷணாந் ந்ருபநந்தந: । துஷ்டாவ ப்ரணதோ பூத்வா ஹ்ருதயாதார மவ்யயம் । உத்தாநபாததநயம் முநிவர்யம் ஜகத்பதி: । தத: ப்ரஸந்நவதநஸ் தத்க்ஷணாந் ந்ருபநந்தந: । துஷ்டாவ ப்ரணதோ பூத்வா ஹ்ருதயாதார மவ்யயம்" என்கிறவசநங்கள் அநுஸந்தேயங்கள். (வேதாந்ததாத்பர்யமான அர்த்தமாவது -ஸமஸ்த ஶப்தமூலமான அகாரத்துக்கு வாச்யனான ஸ்ரீமந்நாராயணனே ஸர்வஸ்மாத்பரன், ஸர்வகாரணபூதன், முமுக்ஷூபாஸ்யன், மோக்ஷ

(க) ரா-பா-கூ-௨. (உ) வி-பு-க-கஉ-சக.

வோடு வாசியற ஸர்வரும் விஸ்மிதராய்; அநந்தரம், இவரை ஆனை யிலே ஏற்றி, ராஜா ஸபரிகரனாய் ஸேவித்துக்கொண்டு நகரி வலம்வரு கிற மஹோத்ஸவத்தைக் காண்கைக்காக, புத்ரர்களை ப்ரஹ்மரதம் பண்ணும் ஸமயத்திலே மாதாபிதாக்கள் காண ஆதரித்துவருமாபோ லே, பிராட்டியோடேகூட ஸபரிகரனாய்க்கொண்டு ஈஸ்வரன் ஸந்நி ஹிதனாக; தத்பரிகரபூதரான ப்ரஹ்மாதிதேவதைகளும் ஆகாசத்திலே நெருங்கிநிற்கிற இத்தை ஸாக்ஷாத்கரித்த ஆழ்வார், ஸ்வஸம்ருத்தியை க்கண்டு இறுமாவாதே, பகவத்ப்ரஸாதத்தாலே நிரவதிக பக்தியைப் பெற்று அவனுடைய ஸர்வஜ்ஞத்வ ஸர்வஶக்தித்வ ஸர்வரக்ஷகத்வாதி களை அநுஸந்திப்பதற்கு முன்னே, முகப்பிலுண்டான ஸௌந்தர்ய ஸௌகுமார்யங்களைக்கண்டு, "காலாதீதமான தேசத்திலே யிருக்கிற வஸ்து, காலம் ஸாம்ராஜ்யம் பண்ணுகிற தேசத்திலே சக்ஷுர்விஷய மாவதே!, இவ்வஸ்துவுக்கு என்ன தீங்குவருகிறதோ?" என்னும் அதி சங்கையாலே, ஆனைமேலே கிடந்த மணிகளைத் தாளமாகக்கொண்டு, "இந்த ஸௌந்தர்ய ஸௌகுமார்யங்களுக்குத் தீங்குவாராதே நித்ய மாய்ச் செல்லவேணும்" என்று திருப்பல்லாண்டு பாடுகிறார்.

அவாப்த ஸமஸ்த காமனாகையாலே ஒன்றுமொரு குறையின்றிக்கே ஸர்வநியந்தாவுமான ஈஸ்வரனைக்கண்டால் தம்முடைய மங்க ளங்களை அவன்பக்கலிலே ப்ரார்த்திக்க ப்ராப்தமாயிருக்க, தாம் அவ னுக்கு மங்களங்களை ஆஶாஸிக்கை அஸங்கதமன்றோவென்னில்; முக ப்பிலே சக்ஷுர்விஷயமான ஸௌந்தர்யாதிகளிலே பகவத்ப்ரஸாத லப்த(ப்த)மானபக்திபரவசராய்க்கொண்டு அழுந்தி, அவனுடைய ஸர்வ ரக்ஷகத்வ ஸர்வசக்தித்வத்தையும் ஸ்வஸம்ருத்தியையும் மறக்கையா லே பகவத்ஸம்ருத்தியே தமக்கு ஸம்ருத்தியாகக்கொண்டு மங்களா சாஸநம்பண்ணுகை ஸங்கதம்.

---

ப்ரதனென்கை. (ப்ரதிபாதித்தருள) என்றவநந்தரம், கீழே கிழி தானே அறுந்துவிழ என்று ஶேஷம். (வலம்) ப்ரதக்ஷிணம். (ப்ரஹ்மரதம்) தோ ளுக்கினியான். (இறுமாப்பு) கர்வம்.

ஆக, ப்ரபந்தமவதரித்தபடியை அருளிச்செய்தார் கீழ், (அவனுடைய ஸர்வஜ்ஞத்வ) இத்யாதி வாக்யத்தை விவரிப்பதாகத் திருப்பல்லாண்டு பா டுகையில், அஸாங்கத்யஶங்கையை அநுவதிக்கிறார் (அவாப்தேத்யாதி). பரிஹரிக்கிறார் (முகப்பிலே இத்யாதி). அழுந்தி - மக்நராய்.

பகவத்ப்ரேமந்தான், தத்ப்ராப்திக்கு ஹேதுவாதல், தததுபவத்துக்குப் பரிகரமாதலாகையொழிய, அறிவுகேட்டைப் பண்ணுமென்னுமிடத்தில் ப்ரமாணமென்னென்னில், அது ஶிஷ்டாசாரஸித்தம்;— (க) "ஸ்த்ரியோ வ்ருத்தாஸ்தருண்யஶ்ச ஸாயம் ப்ராதஸ்ஸமாஹிதா:। ஸர்வாந் தேவாந் நமஸ்யந்தி ராமஸ்யார்த்தே யஶஸ்விந:" - ஸ்த்ரியோ வ்ருத்தா ஸ்தருண்யஶ்ச ஸாயம் ப்ராதஸ்ஸமாஹிதா:। ஸர்வாந் தேவாந் நமஸ்யந்தி ராமஸ்யார்த்தே யஶஸ்விந:" என்று - திவாராத்ரவிபாகமற, தேவதைகளை ரக்ஷித்துப் புகழ்படைத்துப்போந்த சக்ரவர்த்தித் திருமகனுடைய ஸௌந்தர்யாதிகுணங்களுக்கு ரக்ஷகமாக, அயோத்யாவாஸி ஜநங்கள், பெருமாளால் தங்களுக்குவரும் ஸம்ருத்தியைமறந்து, தேவதைகளின் காலிலே விழுந்தார்களிறே;—பிராட்டியைத் திருமணப்புணர்ந்து மீண்டெழுந்தருளாநிற்க, ஸ்ரீபரசுராமாழ்வான் வந்து தோன்றினவளவிலே, தாடகாதாடகேயருடைய நிரஸநங்களைக் கேட்டிருக்கச்செய்தேயும் அஞ்சி, (உ) "க்ஷத்ரரோஷாத் ப்ரஶாந்தஸ்த்வம் ப்ராஹ்மணஶ்ச மஹாயஶா:। பாலாநாம் மம புத்ராணாமபயம் தாதுமர்ஹஸி - க்ஷத்ரரோஷாத் ப்ரஶாந்தஸ்த்வம் ப்ராஹ்மணஶ்ச மஹாயசா:। பாலாநாம் மமபுத்ராணாமபயம் தாதுமர்ஹஸி" என்று சரணம்புக்கு, "அவன் தோற்று மீண்டுபோனான்" என்று கேட்டபின்பு, (ங) "புநர்ஜாதம் ததா மேநே ஸுதாநாத்மாநமேவ ச-புநர்ஜாதம் ததா மேநே ஸுதாநாத்மாநமேவச" என்கிறபடியே தானும் பிள்ளைகளும் மறுபிறவி பிறந்ததாக நினைத்திருந்தானிறே சக்ரவர்த்தியும்—ஸ்ரீகௌஸல்யாரும், (ச) "யந்மங்களம் ஸுபர்ண-

---

பக்திபாரவஶ்யத்தாலே ரக்ஷகத்வாதிகளை மறந்தாரென்னுநின்றீர்; ப(ஃ)க்திபக்தருக்கு ஸாதகமாகவும், ப்ரபந்நருக்கு அநுப(ஃ)வோபகரணமாகவும் ஶாஸ்த்ரம் சொல்லாநிற்க, இது அறிவு கேட்டைப்பிறப்பித்து மங்களாஶாஸநத்திலே மூட்டுமென்னுமதுக்கு ப்ரமாணமென்னென்கிற ஶங்கையை அநுவதிக்கிறார் (பகவத்ப்ரேமமித்யாதி). அத்தை நிராகரிக்கிறார் (அ இத்யாதி). ஶிஷ்டாசாரத்தைக் காட்டுகிறார் (ஸ்த்ரிய: இத்யாதி), (தேவப்பிராட்டியும்) என்னுமளவும். "யஶஸ்விநோ ராமஸ்ய - யஶஸ்விநோ ராமஸ்ய" என்று அந்வயித்து ஶ்லோகதாத்பர்யமருளிச்செய்கிறார் (திவாராத்ரேத்யாதி). [திவாராத்ரவிபாகமற தேவதைகளின் காலிலே விழுந்தார்களிறே] என்றந்வயம். தாடகாதாடகேயாதிநிரஸந முகேந தேவதை

---

(க) ரா-அ-உ-ருஉ. (உ) ரா-பா-எரு-சு. (ங) ரா-பா-எஎ-ரு.
(ச) ரா- அ-உரு-நந.

[illegible] - யந்மங்களம் ஸுபர்ணஸ்ய விநதா கல்பயத்புரா। அம்ருதம் ப்ரார்த்தயாநஸ்ய தத்தே பவது மங்களம்” என்று - விஶ்வாமித்ராத்வரத்ராணாதிகளால் வந்த ஆண்பிள்ளைத்தனத்தை விஸ்மரித்து மங்களாசாஸநம் பண்ணினாளிறே.—ஸ்ரீ தண்டகாரண்யவாஸிகளான ருஷிகளும், (க) “[illegible] - தேதம் ஸோமமிவோத்யந்தம் த்ருஷ்ட்வா வை தர்மசாரிண:। மங்களாநி ப்ரயுஞ்ஜாநா: ப்ரத்யக்ருஹ்ணந் த்ருடவ்ரதா:” என்று- தங்களாபந்நிவ்ருத்திக்கும் அபிமதஸித்திக்கும் இவரே ரக்ஷகரென்று ஸாதநாநுஷ்டாநம் பண்ணுகிறவர்கள், இவர் ஸந்நிஹிதரானவாறே அவற்றைமறந்து, இவர் வடிவழகிலே துவக்குண்டு, மங்களாசாஸநம் பண்ணினார்களிறே.—கர்மஸ்பர்ஶமின்றிக்கே தலைநீர்ப்பாட்டிலே இவரேற்றமெல்லா மறியும்பிராட்டி, இவரழகிலே தோற்று, (உ) “[illegible] - பதிஸம்மாநிதா ஸீதா பர்த்தார மஸிதேக்ஷணா। ஆத்வார மநுவவ்ராஜ மங்களாந்யபிதத்யுஷீ” என்று தொடங்கி, (௩) “[illegible] - பூர்வாம் திஶம் வஜ்ரதர:” என்று- திக்பாலகர்களை இவர்க்கு ரக்ஷகராக அபேக்ஷித்தாளிறே.

இன்னமும், (௪) “[illegible]

களை ரக்ஷித்தென்று ஶேஷம். (ஆண்பிள்ளைத்தனத்தை) ஶௌர்யாதிகளை. ([illegible]-த்ருடவ்ருதா:) என்று த்ருடாத்யவஸாயத்தை நினைத்து (இவரே ரக்ஷகரென்று) என்றது. “[illegible] - தர்மசாரிண:” என்றத்தைப்பற்ற, (ஸாதநாநுஷ்டாநம் பண்ணுகிறவர்கள்) என்றது. ரக்ஷகரென்றறிந்து தத்ப்ரீத்யர்த்தமாகவென்று ஶேஷம். “[illegible] - ஸோமமிவோத்யந்தம்” என்றத்தைப்பற்ற (இவர் ஸந்நிஹிதரித்யாதி). (அவற்றை) ஆபந்நிவ்ருத்த்யபிமதஸித்திகளை. (கர்மஸ்பர்ஶமின்றிக்கே) என்கையாலே, அயோத்யாவாஸிகள், சக்ரவர்த்தி, ஸ்ரீகௌஸல்யையார், தண்டகாரண்யவாஸிகளான இவர்களை வ்யாவர்த்திக்கிறது. (தலைநீர்ப்பாட்டிலே) என்கையாலே-ஸூரிகளை வ்யாவர்த்திக்கிறது. தலைநீர்ப்பாடு-முதல்மடை. “[illegible] - அநுவவ்ராஜ” என்றிருக்கையாலே அழகுக்குத்தோற்றது அர்த்தஸித்தம்.

ஆக ஸ்ரீராமாயணத்தில் ஶிஷ்டாசாரத்தைக்காட்டி, க்ருஷ்ணவ்ருத்தாந்தம் காட்டுகிறார் (இன்னமும், ஜாதோஸீத்யாதி).

(க) ரா-அ-க-கக. (உ) ரா-அ-கசு-உக. (௩) ரா-அ-கசு-உ௪.
(௪) வி-பு-ரு-௩-௫0.

யா। திவ்ய௫ப-மிதம் தேவ வ்யஸ்ர்ஜோபஸம்ஹர-ஜாதோஸி தேவதேவேஶ சங்கசக்ரகதாதர। திவ்யரூபமிதம் தேவ ப்ரஸாதேநோபஸம்ஹர" என்று - "* அயர்வறு மமரர்களதிபதி அவ்வடிவோடே வந்தவதரித்தான்" என்று இவனுடைய பெருமையை அறிந்திருக்கிற தசையிலேயும், கம்ஸபயத்தாலே "இவ்வடிவை உபஸம்ஹரிக்கவேணும்" என்றாளிறே ஸ்ரீவஸுதேவர்; — (க) "உபஸம்ஹர ஸர்வாத்மந் ரூபமேதச்சதுர்புஜம் । ஜாநாது மாவதாரம் தே கம்ஸோயம் திதிஜந்மஜ:" - உபஸம்ஹர ஸர்வாத்மந் ரூபமேதச்சதுர்ப்புஜம் । ஜாநாது மாவதாரந்தே கம்ஸோயம் திதிஜந்மஜ:" என்று, "ஸர்வாத்மந்" என்று- ஸர்வாந்தர்யாமியென்றும், "ஏதச்சதுர்ப்புஜம்" என்று - அவனுடைய அஸாதாரண விக்ரஹமென்று மறிந்திருக்கச் செய்தேயும், கம்ஸபயத்தாலே "இவ்வடிவை உபஸம்ஹரிக்கவேணும்" என்றாளிறே தேவகிப்பிராட்டியும்.

இவ்வர்த்தம் லோகப்ரஸித்தமும்;—அநேககாலம் தபஸ்ஸுபண்ணிப்பெற்று ப்ரதமஜனாய் அதிஸுந்தரனான புத்ரனளவிலே, ஒரு விரோதமின்றிக்கே யிருக்கச்செய்தேயும், செல்லாநின்றதும் வாராநின்றதும் ப்ரேமாந்த்ய(ஸ்நேஹ)த்தாலே பயஹேதுவாகக்கடவதிறே மாதாவுக்கு.—தன்கைக்கடங்காத விற்பிடிமாணிக்கத்தைப் பெற்றவன், அது ஸுரக்ஷிதமா யிருக்கச்செய்தேயும் "அதுக்கு என்ன விரோதம் வருகிறதோ?" என்று காற்றசங்கிலும் பயப்படாநிற்குமிறே.—அல்பதேஜஸ்ஸுக்களான சந்த்ராதித்யர்களுடைய ஸந்நிதியிலே அசித்தான பாஷாணங்கள் உருகாநின்றன, (உ) "பரஞ்ஜ்யோதி ருபஸம்பத்ய" - பரஞ்ஜ்யோதி ருபஸம்பத்ய" என்றும், (ங) "பரஞ்சோதி நீபரமாய்" என்றும் சொல்லுகிறபடியே நிரதிசய ஸௌந்தர்யயுக்தனாய் நிரவதிக தேஜோரூபனான எம்பெருமானைக்கண்டால், பரமசேதநரான ஆழ்வார் கலங்கச்சொல்லவேணுமோ ?

---

இப்படி தேடிப்பிடிக்கவேண்டாதே ஸர்வலோகப்ரஸித்தமான லௌகிகாசாரங்களைக் காட்டுகிறார் (இவ்வர்த்தம் லோகப்ரஸித்தமு மித்யாதி). (விற்பிடிமாணிக்கம்) "வில்" என்று - தேஜிஸ்ஸட்டமாய், பிடியளவும் நீண்டமணியென்னுதல், விற்பிடிபோன்ற மணியென்னுதல், விற்பிடியென்று - ராஜாவாய், ராஜார்ஹமான மாணிக்கமென்னுதல். கீழ்ப்ரமாணங்காட்டி, உபபத்தியுங் காட்டுகிறார் (அல்பதேஜஸ்ஸுக்களித்யாதி).

---

(க) வி-பு-ரு-ங-கங. (உ) சாந்தோ-அ-கஉ-உ. (ங) தி-வா-ங-உ-ங.

ஆகையாலே, ராவணாதிராக்ஷஸ துர்வர்க்கமயமாய், காலம் ஸாம்ராஜ்யம்பண்ணுகிற தேசத்திலே இவ்விலக்ஷண விஷயத்தைக்கண்டருளி, "இவ்விஷயத்துக்கு எவ்வழியாலே தீங்குவருகிறதோ?" என்று பயப்பட்டு, தத்பரிஹாரார்த்தமாகத் திருப்பல்லாண்டு பாடுகிறார்.

ஸ்வஸ்வரூப பரஸ்வரூபங்களை உள்ளபடி அறிந்திருக்கிறஇவர், ரக்ஷ்ய ரக்ஷகபாவத்தை மாறாடி ப்ரதிபத்திபண்ணுகை விபரீதஜ்ஞாநமன்றோவென்னில்; கர்மநிபந்தநமான விபரீதஜ்ஞாநமாய்த்து த்யாஜ்யம்; விஷய வைலக்ஷண்யமடியாக வந்ததாகையாலே அவ்வைலக்ஷண்யம் உள்ளவளவு மநுவர்த்திக்கையாலே ஸ்வரூபப்ராப்தமாகக்கடவது.

இன்னமும், சேஷசேஷிபாவஜ்ஞாந ஸமநந்தரம் சேஷிக்கு அதிசயத்தை விளைக்கை சேஷபூதனுக்கு ஸ்வரூபமாகையாலே, தத்விஷயமாக மங்களாசாஸநம் பண்ணுகை சைதந்யக்ருத்யம்; அந்த சேஷத்வ காஷ்ட்டையாவது - தன்னை அழியமாறியேயாகிலும் ஸ்வாமிக்கு ஸம்ருத்தியை ஆசாஸிக்கையிறே; வேதாந்த தாத்பர்யமிறே இத்திருப்பல்லாண்டில் ப்ரதிபாதிக்கப்படுகிறது.

---

இப்படி ப்ரஸக்தமான ஶங்காபரிஹாரங்களைப்பண்ணி, ப்ரக்ருதார்த்தத்தை உபஸம்ஹரிக்கிறார் (ஆகையாலே இத்யாதி).

கீழ்ச்சொன்னவர்கள் *மயர்வறமதிநல மருளப்பெறுமையாலும், மாநுஷபாவனையாலும், கலங்கப்ராப்தம், ஸ்வரூபஜ்ஞான இவர்கலங்கி மங்களாஶாஸநம்பண்ணினால்,ஸ்வரூபவிருத்தமன்றோவென்ற ஶங்காநுவாதம் பண்ணுகிறார் (ஸ்வஸ்வரூபேத்யாதி). ஸ்வஸ்வரூபவிருத்தமானாலும் விஷய வைலக்ஷண்யஜ்ஞாந மடியாகையாலே உபாதேயமென்று பரிஹரிக்கிறார் (கர்மேத்யாதி).

அநப்யுபகம்ய பரிஹாரார்ந்தரம் (இன்னமும் ஶேஷேத்யாதி). இது ஶேஷத்வஜ்ஞாந கார்யமாகையாலே ப்ராப்தமென்று கருத்து. இத்தை உபபாதிக்கிறார் (அந்த ஶேஷத்வேத்யாதி). ஆக ப்ரபந்தவைலக்ஷண்யத்தை பஹுமுகமாக அருளிச்செய்து, ப்ரஸக்த ஶங்கா பரிஹாரங்களையும் பண்ணி; இனி ப்ரதிபாத்யவைலக்ஷண்ய மருளிச்செய்ய நினைத்து, அந்த வைலக்ஷண்யம் தோற்றும்படி ஈடுபடுகிறார் (வேதாந்தேத்யாதி).

கீழ் "பன்னிரண்டுபாட்டாய்" என்னுநின்றீர், *பன்னிருநாமப்பாட்டுக்களைப்போலே, ஒரு நியதிகண்டிலோமேயென்ன, அருளிச்செய்கிறார் (இப்

இப்ப்ரபந்தத்தில் முன்னிரண்டு பாட்டாலே - தாம் மங்களாசாஸநம் பண்ணுகிறார்; அத்தால் தமக்குப்பர்யாப்தி பிறவாமையாலே, மேல் மூன்றுபாட்டாலே-மங்களாசாஸநம் பண்ணுகைக்கு, பகவச்சரணார்த்திகளையும், கேவலரையும், ஐஶ்வர்யார்த்திகளையு மழைக்கிறார்; அதுக்குமேல் மூன்றுபாட்டாலே ஆஹூதரானவர்கள் இவரோடே ஸங்கதராகிறார்கள்; அதுக்குமேல் மூன்றுபாட்டாலே-அவர்களோடே திருப்பல்லாண்டு பாடியருளுகிறார்; மேலிற்பாட்டு ப(ஃ)லஶ்ருதி.

அவ. — †முதற்பாட்டு. ஸௌந்தர்யாதி கல்யாணகுணோபேதமான விக்ரஹத்தோடேவகுத்த சேஷியானவனைக் காலாதீநமானதேசத்திலே காண்கையாலே "இத்தால் இவனுக்கு என்ன தீங்கு வருகிறதோ!" என்று அதிசங்கைபண்ணி, (க) "అనాదిర్భగవాన్ కాలో నాన్తోఽస్య ద్విజ విద్యతే - அநாதிர்பகவாந் காலோ நாந்தோ஽ஸ்ய த்விஜ வித்யதே" என்கிறபடியே - காலதத்வமுள்ளதனையும் இச்செவ்விமாறாதே நித்யமாய்ச் செல்லவேணுமென்று மங்களாசாஸநம் பண்ணுகிறார்.

மூ.—பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு
பலகோடி நூறாயிரம்
மல்லாண்டதிண்டோள் மணிவண்ணா உன்
‡ செவ்வடி செவ்வி திருக்காப்பு. (க)

வ்யா.—(பல்லாண்டு) அல்லாத அவச்சேதகங்களையொழிய ஆயு

---

ப்ரபந்தத்திலித்யாதி). புத்தி ஸமாதாநார்த்தமாக காதா(ஃ)ப்ரதிபாத்யங்களை உபந்யஸிக்கிறார் என்னவுமாம். "அடியோமோடும்" என்று பஹுவசநமுண்டாயிருந்தாலும், அது ஸ்வாபிப்ராயத்தாலே யாகையாலே (தாம் மங்களாஶாஸநம் பண்ணுகிறார்) என்கிறார். (பகவச்சரணார்த்திகள்) தம்மைப்போல்பவர்.

அரு. — (முதற்பாட்டு). பல்லாண்டு இத்யாதி வ்யாக்யாயத இதி ஶேஷ:. "மணிவண்ணா, பல்லாண்டித்யாதி-செவ்வி திருக்காப்பு" என்கிற பதங்களைக் கடாக்ஷித்து அவதாரிகை (ஸௌந்தர்யேத்யாதி). (இத்தால்) இக்காலத்தால். (இச்செவ்வி) கீழ்ச்சொன்ன ஸௌந்தர்யாதிகள்.

நாள் என்னாதே "ஆண்டு" என்று விசேஷித்ததுக்குத் தாத்பர்யம் (அல்லாதஇத்யாதி). (அவச்சேதகங்கள்) என்றது - விபாகஜநகதயா கால

---

† அரும்பதாநுகுணமாக "முதற்பாட்டு" என்றவநந்தரம், (பல்லாண்டித்யாதி) என்று ப்ரதீகதாரண மிருந்தால் ஸ்வரஸம்.

(க) வி-பு-க-உ-உரு. ‡ (பா) சேவடி.

ஸ்ஸுக்குப் பர்யாயமான ஆண்டைக்கொண்டு காலத்தைப் பெருக்கு கிறார் ஆயுஸ்ஸை ப்ரார்த்திக்கிறவராகையாலே. (௩) "யாமோஷதிமிவா ஆயுஷ்மந் - யாமோஷதிமிவா யுஷ்மந்" என்று ஆயுஸ்ஸை ப்ரார்த்தித் தாரிறே பெரியவுடையார். (௨) "வேதநூல்பிராயம் நூறு" என்று- ஆயுர்பர்யாயமாகச் சொல்லிற்றிறே வத்ஸரத்தை. இந்த பஹுவச நத்துக்கு அஸங்க்யாதத்வமே முக்யார்த்தமாகையாலே, அஸங்க் க்யாதமான வர்ஷங்கள் இவ்வழகோடே நித்யமாய்ச் செல்லவேணு மென்கிறார்.

"பல்லாண்டு" என்கிற சப்தம் ஸ்வரூப வாசியாயுமிருக்கிறது; - உத்க்ருஷ்டனா யிருப்பானொருவனை அபக்ருஷ்டனா யிருப்பானொரு வன் கண்டால், அவனுடைய உத்கர்ஷாநுரூபமாகச் சொல்லும் பாசுர மாகையாலே, ஸர்வேஶ்வரனுடைய உத்கர்ஷத்துக்கு அவதி(தி)யில்லா மையாலும், அவனைக்குறித்துத் தம்முடைய நிகர்ஷத்துக்கு அவதி

வ்யாவர்த்தகங்களை; அவையாவன-நிமேஷ கலா காஷ்ட்டாதிகள். இப்படி ஆயுஸ்ஸைப் ப்ரார்த்தித்தாருண்டோவென்ன, (யாமோஷதிம் இத்யாதி). (௩) "ப்ராணேப்யோ பி கரீயஸீம் - ப்ராணேப்யோ பி கரீயஸீம்" என்று பிராட்டியுடைய விஶ்லேஷத்தால் இவர்க்கென்ன தீங்கு வருகிறதோவென்று நினைத்திருக்கிற இவர், "ஆயுஷ்மந் - ஆயுஷ்மந்" என்று ஸம்போதிக்கை யாலே ஆயுஸ்ஸையுடையீராவீரென்று ப்ரார்த்தித்தாரென்று கருத்து. ஆண்டு என்றால் ஆயுஸ்ஸைக்காட்டுமோ வென்ன, (வேதநூலித்யாதி). (௪) "ஶதாயு: - ஶதாயு:" என்ற ஶ்ருதியைப்பற்ற "வேதநூல்" என்றது. (பிராயம்) வத்ஸரம். (இந்த பஹுவசநத்துக்கு) என்றது - "பல்" என்கிறது க்கு என்றபடி. (முக்யார்த்தமாகையாலே) என்றது- அஸங்குசிதார்த்த மாகையாலே யென்கை. சதாதிகளைச்சொன்னால் ஸங்குசிதமாமென்று கருத்து. நாள்என்னாதே "ஆண்டு" என்றது - காலதத்வத்தைப் பெருக்கு கிறதுக்கு நியாமகாந்தரம் காட்டுகைக்காக.

அர்த்தாத் ஸ்வரூப போத (போ)கமுமா யிருக்கிறதென்கிறார் (பல் லாண்டென்கிற வித்யாதி). அதுக்கு ஹேதுவை அருளிச்செய்கிறார் (உத் க்ருஷ்டனாயித்யாதி). இத்தை ப்ரக்ருதத்துக்குச் சேர உபபாதிக்கிறார் (ஸர்வேஶ்வர னித்யாதி).உத்கர்ஷாபகர்ஷங்கள் ஸாவதிகங்களானால் ஸோ பாதி(தி)கங்களாகக் கண்டோமிறே என்று கருத்து. காலத்தைப்பெருக்கு

(௧) ரா-ஆர-௬௭-௧௪.　　(௨) தி-மா-௩.　　(௩) ரா-கி-௨௭-௩௧.
(௪) யஜு-கா-௨-ப்ர-௩-௪௰.

யில்லாமையாலும், இந்த உத்கர்ஷாபகர்ஷரூப வைஷம்யம் ஸ்வரூப ப்ரயுக்தமாகையாலே, "பல்லாண்டு" என்கிறசப்தம் ஸ்வரூபவாசியா கிறது. மேல்பண்ணுகிற மங்களாசாஸநம் ஸ்வரூபப்ரயுக்தம் என் கைக்காகச் சொல்லிற்று. (க) "ஜிதம்" என்றும், (உ) "நமஃ" என் றும், (ங) "தோற்றோம்" என்றும், (ச) "போற்றி" என்றும், "பல் லாண்டு" என்றும், இவை பர்யாயம்.

இந்தப்பதங்களுக்கு அர்த்தபேதமில்லையோவென்னில்; ப்ரவ்ரு த்திநிமித்த பேதத்தாலேவரும் விசேஷமுண்டானாலும் விழுக்காட் டில் ஆத்மஸ்பர்சியாய்த் தலைக்கட்டுகையாலே பர்யாயமாகிறது. "ஜி தம்" என்று - அவனாலே தன்னபிமாநம் போனபடியை இசைந்து, அந்தலையில் வெற்றிக்கு மேலெழுத்திடுமவன் வ்யவஹாரம். இத் தால்- ஸ்வரூபப்ரகாசத்தாலல்லது அபிமாநம் போகாமையாலே, இச் சப்தமும் விழுக்காட்டால் ஸ்வரூபவாசியாகிறது. "நமஃ" என்று - எனக்குரியே னல்லேனென்றபடி. இது நிவ்ருத்தஸ்வாதந்த்ர்யனு

---

கைடன்றே வேண்டுவது, இவ்வர்த்தம் தோன்றும்படி இந்த சப்தம் ப்ர யோகிப்பானென்னென்ன, (மேல்பண்ணுகிறவித்யாதி) (மேல்) என்ற துக்கு-"திருக்காப்பு" என்கிறதிலே நோக்கு. ஆனாலும் "ஜிதம்" இத்யாதி களோபாதி இது ஸ்வரூபவாசியாமோவென்ன, (ஜிதமித்யாதி), ஐஸ்வ ர்யாபிமாநி புண்டரீகாக்ஷனை "ஜிதம்"என்கையாலே ஸ்வரூபஜ்ஞனாய்ச் சொ ன்னதென்று தோன்றுகையாலும், (ரு) "தொலைவில்லிமங்கலந்தொழும், என்கையாலே, ஸ்வரூபம் சொல்லிற்று" என்கிறபடியே, மத்யமபதம் ஸ்வ ரூப வாசகமாகையாலும், (ங) "தோற்றோம் மடநெஞ்சம்" என்று இரு ளுக்குத் தன்ஸ்வரூபம் சொல்லுகையாலும்; (ச) "போற்றியென்றே கைக ளாரத்தொழுது சொன்மாலைகள்" என்றவிடத்தில் ஸ்வரூபவாசகமாகை யாலும், இவற்றோபாதி இதுவும் என்று தாத்பர்யம்.

அர்த்தபேதமிருக்க பர்யாயமென்ன வொண்ணாதே என்கிற சங்காநு வாதம் பண்ணிப் பரிஹரிக்கிறார் (இந்தப்பதங்களுக்கித்யாதி). (விழுக்காட் டில்) என்றது - அர்த்தாத் என்றபடி. இந்த சப்தங்களுக்கு ப்ரவ்ருத்தி நிமித்தங்களையும், ஆத்மஸ்பர்சிகளாகிற ப்ரகாரங்களையும் வ்யக்தமாக அருளிச்செய்கிறார் (ஜிதமென்றித்யாதி). (வெற்றிக்கு) ஜயத்துக்கு. (மே லெழுத்திடுகை) ஸம்மதிக்கையென்றபடி. (இதுவும்) நமஸ்ஸப்தமும்.

---

(க) ஜிதந்தா-க-க. (உ) திருமந்த்ரம். (ங) தி-வாய்-உ-க-எ. (ச) தி-வாய்-ச-ரு-க. (ரு) முமுக்ஷுப்படி-அஅ.

டைய வ்யவஹாரம். இதுவும் ஸ்வரூப ப்ரகாசத்தாலல்லது கூடாமையாலே ஸ்வரூப ஸ்பர்சியாகிறது. "தோற்றோம்" என்கிறது - "அத்தலையில் வெற்றியே தனக்கு ப்ரயோஜநம்" என்றிருக்குமவனுடைய வ்யவஹாரம்; இதுவும், அஹங்கார நிவ்ருத்தியிலே யல்லது ஸம்பவியாமையாலே ஸ்வரூப ஸ்பர்சியாகிறது. "போற்றி" என்று. தன்னைப் பேணாதே அத்தலையில் ஸம்ருத்தியையே பேணுமவன் வ்யவஹாரம்; இதுவும் ஸ்வரூபாநுரூபமிறே. "பல்லாண்டு" என்றது-தன்னைப்பாராதே "அத்தலையில் ஸம்ருத்தியே நித்யமாய்ச் செல்லவேணும்" என்றிருக்குமவன் வ்யவஹாரம். ஆக, இச்சப்தங்கள் - ஸ்வரூபத்தையும், ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தி(ஓ)யையும் ப்ரகாசிப்பிக்கையாலே ஸ்வரூபாநுபந்தியே யாகிறது.

(பல்லாண்டு) மறித்து "பல்லாண்டு" என்கிறதென்னென்னில்; அகவா யறியாதவனுக்குத் தெரியாமையாலே பலகால் சொல்லவேண்டியிருக்கும்; ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனாய் *எதிர்சூழல்புக்குத் திரிகிறவனுக்கு இருகால் சொல்லவேண்டா, இப் புநருக்திக்குப் பொருளென்னென்னில்; அவனுடைய ஸர்வஜ்ஞத்வத்தில் குறையாலல்ல; "ஒருகால்சொன்னோம்" என்று ஆறியிருக்கமாட்டாத தம்முடைய ஆதராதிசயத்தாலும், பலகால் சொல்லுமத்தாலும் பர்யாப்தி பிறவாத விஷய

"ஜிதம்" என்றதுக்கும், "தோற்றோம்" என்றதுக்கும் பேதம் (மேலெழுத்திடும்) என்கையாலும், (தனக்குப்ரயோஜநம்) என்கையாலும் கண்டு கொள்வது. அதாவது - "ஜிதம்"என்று ஜயம் அத்தலைக்கும், "தோற்றோம்" என்று ஜயம் இத்தலைக்கும் ப்ரயோஜநமென்கை. உக்தார்த்த நிகமநம் (ஆகவித்யாதி). (க) "'அந்தி தொழுஞ்சொல்லு' என்கையாலே ப(ஃ)லம் சொல்லிற்று" என்கிறபடியே, மத்யமபதம்போலே இந்த சப்தங்களெல்லாமென்று திருவுள்ளம்பற்றி, (ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தியையும்) என்கிறார்.

ஸர்வஜ்ஞத்வாதிகளை மறந்து, மங்களாசாஸநம் பண்ணுகிறபக்ஷத்திலே சங்காநுவாதம் பண்ணுகிறார் (மறித்து இத்யாதி). (மறித்து) புநரபி. மங்களாசாஸநம் சேஷத்வகார்யமாகச் சொன்னபக்ஷத்தில் சங்காநுவாதம் பண்ணுகிறார் (அகவாயித்யாதி). (எதிர்சூழல் புகுகை) சேதநவஸீகரணார்த்தமாக எதிராகச்சுற்றித்திரிகை; அதாவது - அந்தர்யாமியாயிருக்கை த்விதீயசங்காபரிஹாரம் (அவனுடைய வித்யாதி). ப்ரதமசங்கா

(க) முமுக்ஷுப்படி-அஅ.

வைலக்ஷண்யத்தாலும் அருளிச்செய்கிறார். த்ருஷார்த்தனானவன் தண்ணீர்பெறுமளவும் "தண்ணீர்" "தண்ணீர்" என்னுமாபோலே, தம்முடைய பயம் சமிக்குமளவும் "பல்லாண்டு" "பல்லாண்டு" என்ன ப்ராப்தமிறே.

(பல்லாயிரத்தாண்டு) கீழில் பஹுவசநத்திலே - வர்ஷங்களினுடைய அஸங்க்க்யாதத்வம் சொல்லியிருக்க, இதுக்கு உதயமில்லையே யென்னில்; அவச்சேதகங்களுக்கு ஸங்க்க்யை யில்லாமையாலே காலாவச்சேத்யத்துக்குத் தொகையில்லை; ஆகையாலே யருளிச்செய்கிறார். அவச்சேதகங்களாவன - ஸூர்யபரிஸ்பந்தாதிகள்; அவச்சேத்யங்களாவன - க்ஷணலவாதிகள். வர்ஷத்துக்கு அவச்சேதகர் - தேவர்கள்; அத்தைப் பற்றச்சொன்னார் கீழ்; பலவர்ஷத்துக்கு அவச்

---

பரிஹாரம் (த்ருஷார்த்தனித்யாதி).

(கீழில் பஹுவசநம்) என்றது - "பல்லாண்டு" என்கிறத்தைப்பற்ற. (இதுக்கு) "பல்லாயிரத்தாண்டு" என்றதுக்கு. இது "பலகோடி நூறாயிரம்" என்றதுக்கு முபலக்ஷணம்; மேல் இதுக்கும் பரிஹாரம் சொல்லுகையாலே. கீழில் "பல்லா† (யிரத்தா)ண்டு" என்கிற இடத்தில் அஸங்க்க்யாத காலதத்வம் சொல்லுகையால், அதிலும் குறைந்து "ஆயிரம்" என்றும், "பல்கோடி" என்றும் ந்யூநகாலத்தை யிட்டு மங்களாசாஸநம் பண்ணுமது ஆதர கார்யமாகக் கூடாது, ஸமாதி(தி)க காலங்களையிட்டு மங்களாசாஸநம் பண்ணுமதுவே ஆதராதிசயகார்யமாகையாலே யென்று இச்சங்கைக்குக்கருத்து. (க) "யஸ்ஸர்வஜ்ஞஸ் ஸர்வவித் - யஸ்ஸர்வஜ்ஞஸ் ஸர்வவித்" என்கிற ஶ்ருதியில், ஸர்வவிசேஷ்யக ஜ்ஞாநத்வ ரூபேண ஸர்வஜ்ஞாநம் முதல்பதத்துக்கும் ஸர்வப்ரகாரக ஜ்ஞாநத்வரூபேண ஸர்வஜ்ஞாநம் இரண்டாம்பதத்துக்கும் அர்த்தபேதம்சொல்லி, பௌநருக்த்யம் பரிஹரிக்குமாபோலே, "பல்லாண்டு பல்லாண்டு" என்றதுக்கு அஸங்க்க்யாத தேவவர்ஷத்வேநவும், "பல்லாயிரத்தாண்டு" என்றவிடத்திலே ப்ரஹ்மஸம்பந்த்யஸங்க்க்யாதவர்ஷத்வேநவும், "பலகோடி நூறாயிரம்" என்றவிடத்தில் அஸங்க்க்யேய ப்ரஹ்மாக்களுடைய அஸங்க்க்யாத வர்ஷத்வேநவும், காலதத்வமெல்லாம் அர்த்தமாகச்சொல்லி, பௌநருக்த்யம் பரிஹரிக்கிறார் (அவச்சேதகங்களுக்கித்யாதி). (அவச்சேதகங்களுக்கு) காலவ்யாவர்த்தகங்களுக்கு. (தொகையில்லை) இயத்தாநிஷ்கர்ஷமில்லை. அவச்சேதகங்கள்தானவை யென்ன, (வர்ஷத்துக் கித்யாதி). (வர்ஷம்) ஸம்வத்ஸரம்.

---

(க) முண்ட-க-க. ‡ குண்டலிதம் ப்ரக்ஷிப்தம்-அசுத்தஞ்ச.

சேதகன் - ப்ரஹ்மா; அத்தைப்பற்ற வருளிச்செய்கிறார் (பல்லாயிரத்தாண்டு) என்று.

(பலகோடி நூறாயிரம்) என்று ப்ரஹ்மாக்களுக்குத் தொகையில்லாமையாலே யருளிச்செய்கிறார். காலக்ருத பரிணாமமில்லாத தேசத்திலுள்ளார்க்கும் ஸ்வஸத்தை யுள்ளவளவும் விஷய வைலக்ஷண்யத்தைப்பற்ற அதிசங்கையும் மங்களாசாஸநமும் நித்யமாய்ச் செல்லாநின்றது; காலக்ருத பரிணாமமுள்ள தேசத்திலே இருக்கிறவர்க்கு அதிசங்கையும், அத்தால் வந்த பயமும், பயநிவ்ருத்திக்காகக் காலத்தைப்பெருக்கி, இக்காலமுள்ளதனையும் இப்படி மங்களாசாஸநம் பண்ணச் சொல்லவேணுமோ?

இப்படி மாறிமாறி பயத்தைவிளைத்த காலத்தைப்பெருக்கி இதுவே தமக்கு யாத்ரையாய்ச் செல்லப்புக்கவாறே, அவன், "இவருடைய பயத்தைப் பரிஹரிக்கவேணும்" என்று பார்த்து, "புலிகிடந்த தூற்றுக்கஞ்சிக் காவல்தேடுவாரைப்போலே, நீர் நமக்கு அஞ்சக்கடவீரோ! மல்லவர்க்கத்தை நிரஸித்த தோளிருக்கிறபடி பாரீர்!" என்று தோள்வலியைக்காட்டினான்; ராவணாநுஜனைக்குறித்து மஹாராஜர்க்குப் பிறந்த பயத்தைப் போக்குகைக்காகத் தம்மிடுக்கைக்காட்ட அவர் பயம் சமிக்கக் காண்கையாலே, "இவ்விஷயத்திலும் பலிக்கும்" என்று மிடுக்கைக்காட்ட, இவர்க்கு இதுதானே பயஹேதுவாய்த்து. மஹாராஜர் பயத்தைத் தீர்த்தபடி எங்ஙனே யென்னில்; (க) [[illegible]

---

இப்படி காலத்தைப் பெருக்கவேணுமோ, காலமெல்லா மென்னலாமே யென்ன, காலக்ருத பரிணாமமுள்ள தேசமென்று தோற்றுகைக்காக என்னாநின்று கொண்டு, (உ) "[illegible]- ஸ்நேஹாதஸ்த்தாநரக்ஷாவ்யஸநிபிஃ" என்றத்தை உட்கொண்டு, கைமுதிகந்யாயத்தாலே ஸாதிக்கிறார் (காலக்ருதேத்யாதி). (மங்களாசாஸநம்பண்ண) என்றது - மங்களாசாஸநம் பண்ணுகையும் என்றபடி.

"மல்லாண்டதிண்டோள்" என்றதுக்கு அவதாரிகை (இப்படி யித்யாதி).‡( (பார்த்து) என்ற வநந்தரம், ஸர்வேஶ்வரன் என்று அத்யாஹார்யம்.) (தூறு) நிகுஞ்ஜம். தோள்வலியைக்காட்டினான் என்னாநின்றீர், இது சமிக்கக்கண்டாறோ வென்ன,(ராவணாநுஜனேயித்யாதி). இவ்வாக்யத்தை விவரிக்கிறார் (மஹாராஜரித்யாதி, பயஹேதுவாய்த்து) என்னுமளவும்.

---

(க)ரா-யு-கஅ-உரு. (உ)ஶ்ரீகுணரத்நகோ-உச. ‡குண்டலிதம்ப்ரக்ஷிப்தம்.

दानवान् यक्षान् - பிஶாசாந் தாநவாந் யக்ஷாந்] கள்ளர், பள்ளிகள், வலையர், என்னுமாபோலே ஹிம்ஸகருடைய அவாந்தர பிதை (भेद) யிருக்கிறபடி. (க) [पृथिव्यांचैव राक्षसान् - ப்ருதிவ்யாஞ்சைவ ராக்ஷஸாந்] லங்கையிலுள்ள ராக்ஷஸரளவன்றிக்கே, *பஞ்சாசத்கோடி விஸ்தீர்ணையான பூமியிலுள்ள ராக்ஷஸரெல்லாரும் எதிரிகளானாலும். [अङ्गुल्यग्रेण तान् हन्याम् - அங்குல்யக்ரேண தாந் ஹந்யாம்] ஆக, சத்ருவர்க்கங்களெல்லாம் ஒரு கலத்திலே உண்டு எதிரிட்டாலும் இவற்றினுடைய நிரஸநத்துக்கு அஸ்த்ர சஸ்த்ரங்கள் வேணுமோ? க்ஷுத்ரக்ரிமிகளை நிரஸிக்குமோபாதி அங்குல்யக்ரத்தாலே நிரஸிக்க வல்லோங்காணு மென்றார். ஆனால், நம்மை நலிந்த ப்ரதிபக்ஷம் நசியாதேகிடக்கிற தென்னென்னில்; "அழிப்போம்" என்னும் இச்சை யில்லாமை; இச்சையுண்டானால் அழிக்கையில் அருமையில்லை. அதுதனக்கு அடியென்னென்னில்; "உயிரோடே தலைசாய்க்குமானால் அழிக்கிறதென்:" என்னு மிரக்கத்தாலே. இவ்வார்த்தை ராம பாக்ய (भाग्य)த்தாலே மஹாராஜர் நெஞ்சில் பட்டு பயநிவ்ருத்திக்கு உடலாய்த்து; இவர்க்கு இதுதானே பயஹேதுவாய்த்து.

(மல்லாண்டதிண்டோள்) மல்லவர்க்கத்தை ஸ்வாதீநமாகப் பண்

---

இந்தசங்கைக்கு (இவ்வார்த்தை) என்கிற வாக்யபர்யந்தம் பரிஹாரம். "हन्याम्-ஹந்யாம்" என்கையாலே (எதிரிகளானாலும்) என்றது அர்த்த ஸித்தம். "தாந்" என்கிற தச்சப்த பஹுவசநத்தாலே எல்லாரையுங் கூட்டினதுக்குத் தாத்பர்யம் (ஆகவித்யாதி). "இச்சந்" என்றதுக்கு சங்காபரிஹாரரூபேண தாத்பர்யம் (ஆனலித்யாதி). (அது தனக்கு) என்றது-இச்சையில்லாமைக்கென்றபடி "யதிவா ராவணஸ் ஸ்வயம்" என்றத்தைப்பற்ற (உயிரோடே இத்யாதி). (இவ்வார்த்தை) இந்தஶ்லோகம். (ராமபாக்யத்தாலே) என்றதுக்குத் தாத்பர்யம் - மஹாராஜருக்குப் பெருமாளிடத்தில் ப்ரேமாதிக்யத்தாலே இவ்வார்த்தை நெஞ்சிற்படாதே ப(भ)ய ஹேதுவாகச் செய்தேயும் விபீஷணாபயஹேதுவான ராமபாக்யத்தாலே யென்று (இதுதானே) இக்த மிடுக்குத்தானே. ஆகையாலே மங்களாசாஸநம் பண்ணுகைக்குத் தோள்வலியையிட்டு ஸம்போதிக்கிறாரென்று "மல்லாண்டதிண்டோள்" என்றத்தோடே கூட்டுவது.

(மல்லவர்க்கம்) என்றது - விகட ஸகல தௌஸலப்ரப்ருதிகளை.

---

(க) ரா-யு-க௬-உ௩.

ணின திண்ணியதோள். பிற்பாடரான கம்ஸாதிகளை அநாயாஸேந கொல்லுகையாலே திண்ணியதோள் என்கிறது. "மல்" என்று - மிடுக்காய், அத்தை அடிமைகொண்ட திண்ணியதோளென்கிற தாகவுமாம். இம்மிடுக்கு இவர்க்கு பயஹேதுவாவானென்னென்னில்; ஶூரனான புத்ரனைக்கண்டால், பெற்றதாய், "இவன் மதியாதே யுத்தத்திலே புகும், என்வருகிறதோ!" என்றுபயப்படுமாபோலே பயப்படுகை யுக்தம். "மல்லரை யழியச் செய்த தோள்" என்று இவரறிந்தபடி யென்னென்னில்; காதில் தோடுவாங்கினாலும் "தோடிட்ட காது" என்று அறியுமாபோலே.

(மணிவண்ணா) நீலமணிபோலே யிருக்கிற திருநிறத்தை யுடையவனே! அதிரமணீயமாய் அத்யுஜ்ஜ்வலமாய் அதிஸுகுமாரமாய் அதிஸுலபமாயிருந்துள்ள வடிவைக்கொண்டு முரட்டஸுரர்களுடைய ஸகாசத்திலேசெல்லுவதே!,(க)[క్వ యౌవనోన్ముఖీభూత సుకుమార తనుర్హరిః। క్వ వజ్రకఠినాzభోగ శరీరోzయం మహాసురః-க்வ யௌவநோந்முகீபூதஸுகுமாரதநுர் ஹரி:।க்வ வஜ்ரகடிநாzபோக ஶரீரோzயம் மஹாஸுர:] என்று - வெண்ணெயமுதுசெய்து வளர்ந்த சிறுபிள்ளையை, முரட்டு

---

"ஆண்ட" என்றதின் தாத்பர்யம் (ஸ்வாதீநமாக) என்றது. மல்லரை ஆளும்போது திண்மை அர்த்தஸித்தமன்றோ? "திண்" என்று, விசேஷிப்பானென்னென்ன, (பிற்பாடரித்யாதி). "மல்" என்று; சக்தி விசேஷமாய், ஆளுகை-உடைமையாய்; திண்மை - காடி(ந்)ந்யமாய், மிடுக்கையுடைத்தான திண்ணியதோள் என்கிறார் (மல் என்றித்யாதி). (மதியாதே) எண்ணாதே. முதலர்த்தத்தைச் சங்கித்துப் பரிஹரிக்கிறார் (மல்லரையித்யாதி). க்ருஷ்ணாவதாரத்தில் விக்ரஹம்போலே ஸேவை ஸாதிக்கையாலே, அருளிச்செய்கிறார் (காதில்தோடு இத்யாதி). (தோடு) தாடங்கம்.

ஸப்தார்த்தம் (நீலமணியித்யாதி). கீழ்ப்பதத்தோடே கூடி, "மணிவண்ணா" என்றதுக்கு, அர்த்தாந்தரம் (அதிரமணீயமித்யாதி). "வண்ணம்" - வடிவு. (ரமணீயம்) மநோஹரம். (உஜ்ஜ்வலம்) தேஜிஷ்டம். (ஸுகுமாரம்) என்றது-ஸ்நிக்த(ஃ)தையாலே. (ஸுலபம்)என்றது-முடிந்தாளலாமென்றிருக்கையாலே. ஸௌகுமார்யத்துக்கஞ்சிக் கூப்பிட்டார்களுண்டோ வென்ன (க்வயௌவந இத்யாதி). ஶ்லோகார்த்தம் (வெண்ணெயித்யாதி). (பொர) யுத்தம்பண்ண. முந்தின (என்று) என்ற

---

(க) வி-பு-ரு-௨௦-௬௦.

வடிவையுடைய மல்லரோடே ஒக்கப் பொரவிடுவதே!, (க) †"ஸமம் யுத்தமித்யாஹு:" என்று கூப்பிட்டார்களிறே ஸ்ரீமதுரையில் பெண்கள். ஸௌகுமார்யம் பயஹேதுவாகிறது, ஸௌலப்யம் பயஹேதுவோவென்னில்; அஸுரநிரஸநார்த்தமாக தேவதைகள் சரணாகதியைப் பண்ணினமாத்ரத்திலே, ஸுலபனாய் அஸுரர்களாஸ்யத்திலே புகும் என்னுமத்தாலே பயப்படுகிறார்.

"ஆஸ்ரிதர்க்குத் தஞ்சமான ஸௌலப்யத்தையும் மிடுக்கையுங்கண்டால் நீரிங்ஙனே அஞ்சக்கடவீரோ!" என்ன (உன்செவ்வடி) அது என்னால் வருகிறதன்று, உன்வடிவின் வைலக்ஷண்யத்தாலே வருகிறது. நீதான் உன்னைக் கண்ணாடிப்புறத்திலே கண்டால், ஸ்வதஸ் ஸர்வஜ்ஞனான நீயும் கலங்கிப் பரியவேண்டும்படியன்றோ உன்வடிவிருப்பது. (செவ்வடி) செவ்விய அடியென்னுதல்; சிவந்த அடியென்னுதல். குடி(ஸ்ரீ)லஹ்ருதயர்க்கும் செவ்விதாகையும், திருமேனிக்குப் பரபாக(ஜ)மாகையும், இரண்டும் இவர்க்கு பயஸ்த்தாநமாகிறதிறே. சேஷபூதன் சேஷிவடிவைக்கண்டால் "திருவடிகள்" என்றிறே

---

பதத்தை "ஸமம்-ஸமம்" என்றதுக்கு முன்னே கூட்டுவது. (என்று) என்கிற இரண்டுபதத்திலும் சகாரம் அத்யாஹார்யம். ஸௌலப்யம் பயஹேதுவாகிறபடியை சங்காபூர்வகமாக உபபாதிக்கிறார் (ஸௌகுமார்யமித்யாதி).

"மல்லாண்ட" என்கிறபதத்தையும், "மணிவண்ணா" என்கிறபதத்தினிரண்டாம் அர்த்தத்தையும் அவலம்பித்து, அவதாரிகை (ஆஸ்ரிதர்க்கித்யாதி). நமக்கு உபயுக்தமான என்றுகூட்டுவது. ஆஸ்ரிதர்க்கு ஸௌலப்யம், நமக்கு மிடுக்கு என்று யோஜிப்பது. வ்யாவ்ருத்தி பூர்வகமாக "உன்" என்றதுக்குத் தாத்பர்யம் (அதுவித்யாதி). உக்தார்த்தத்தைக் கைமுதிகந்யாயேந த்ருடீகரிக்கிறார் (நீதானித்யாதி). "அடி" என்றத்தைத் திருமேனிக்கு உபலக்ஷணமாக்கி, "வடிவு" என்றது. மிடுக்கும் ஸௌகுமார்ய ஸௌலப்யங்களும் பயஹேதுவானவோபாதி, ஆர்ஜவ ஸௌந்தர்யங்களும் பயஹேதுக்களென்றருளிச்செய்கிறார் (குடிமேலத்யாதி). திருமேனியென்னாதே "அடி" என்பானென்னென்ன, (சேஷபூதனித்யாதி). ஆஸ்ரயண வேளையிலன்றோ திருவடிகளைப் பற்றுவது; மங்களாசாஸந

---

(க) ரா-யு-௪௦௩-௬. †இது ஸ்ரீராமாயண ஸ்லோகமாயினும், இங்கெடுத்தது-கோபிமார்களும் சொல்ல வடுக்குமென்று.

வ்யவஹரிப்பது. ஆஸ்ரயணவேளையோடு போக(ஸ்ரீX) வேளையோடு மங்களாஸாஸநவேளையோடு வாசியற ஆஸ்ரிதரிழியுந்துறை திருவடிகளிறே. (செவ்வி) (க) "அரும்பினை யலரை" என்னுமாபோலே நித்யயௌவநமாயிருக்கை.

(திருக்காப்பு) குறைவற்ற ரக்ஷை. உண்டான அமங்களங்கள் போகைக்கும் இல்லாத மங்களங்க ளுண்டாகைக்கும் பண்ணின ரக்ஷையென்கை. ஒரு க்ரியையின்றிக்கே குறைந்திருப்பா னென்னென்னில்; தாழ்ந்தாரைக்குறித்து "ரக்ஷையுண்டாயிடுக" என்றும், ஸமரைக்குறித்தும் பரிச்சிந்நமான உத்கர்ஷ முடையாரைக்குறித்தும் "ரக்ஷை யுண்டாகவேணும்" என்றும் சொல்லக்கடவது; தமக்கும் ஈஸ்வரனுக்குமுண்டான நிரவதிகமான உத்கர்ஷாபகர்ஷத்தில் பாசுர மில்லாமையாலே குறைந்துகிடக்கிறது; வேதாந்தத்தாலே நாட்டை யடைய வென்றிருக்கிற இவர் லக்ஷணத்தில் விழக் கவிபாட மாட்டாமை யன்றிறே.

இன்னமும், இவ்விஷயத்திலே மங்களாசாஸநம்பண்ண இழிந்தார்க்கு "மங்களாசாஸநம் பண்ணினோம்" என்று கைவாங்கவொண்ணாத அபர்யாப்திக்கு ஸூசகமாயிருக்கிறது.

---

வேளையில் இப்படி சொல்லுவானென்னென்ன, (ஆஸ்ரயணேத்யாதி). (உ) "அடிக்கீழ்" என்கையாலும், (ங) "பாதபற்புத்தலைசேர்த்து" என்கையாலும், (ச) "அடிபோற்றி" என்கையாலும், எப்போதும் அடிவிடார்களிறே யென்று கருத்து. ப்ரமாணகத(ஸ்ரீ)பூர்வகமாகத் தாத்பர்யம் (அரும்பினை யித்யாதி). அரும்பினையலரை - முகுளமென்னவுமாய் மலரென்னவுமா யிருக்கை ஸ்வபாவமாகையாலே நித்யயௌவநம் பலிதம்.

"திரு" என்றதுக்கர்த்தம் (குறைவற்ற)என்றது. இத்தைவிவரிக்கிறார் (உண்டான இத்யாதி). (உண்டாயிடுக) என்றது - அநுக்ரஹம்தோற்றச் சொல்லுகை. (உண்டாகவேணும்) என்றது - ப்ரார்த்தனை தோற்றச் சொல்லுகை. இப்படிச் சொல்லுகைக்கு நியாமகம் (வேதாந்தேத்யாதி). (நாட்டையடைய) என்றது - நாட்டில் வித்வஜ்ஜநங்களையெல்லா மென்றபடி. (வென்று) ஜயித்து. (லக்ஷணத்தில்விழ) என்றது - லக்ஷணோபேதமாக என்றபடி.

கீழ்ல்சங்கைக்குப் பரிஹாராந்தரம் (இன்னமுமித்யாதி).

---

(க) தி-மொ-எ-௧0-௧. (உ) தி-வாய்-௬-௧0-௧0.
(ங) தி-வாய்-உ-௯-௧. (ச) தி-பா-உ-ச.

எல்லாப்பாட்டுக்கும் இதுதான் முகவுரைபோலே யிருக்கிறது.

[மல்லாண்டதிண்டோள் மணிவண்ணா! பல்லாண்டு, பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு, பலகோடி நூறாயிரம் - உன்செவ்வடி செவ்வி திருக்காப்பு] என்றந்வயம். ... ... ... ... (க

அவ. — இரண்டாம்பாட்டு. கீழ் - விக்ரஹயோக(ஶ)த்தையுங் குணயோகத்தையும் குறித்து மங்களாசாஸநம் பண்ணினார்; இதில் உபயவிபூதி யோகத்தைக்குறித்து மங்களாசாஸநம் பண்ணுகிறார்.

மூ.—அடியோமோடும் நின்னோடும் பிரிவின்றி யாயிரம் பல்லாண்டு
வடிவாய் நின்வலமார்பினில் வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு
வடிவார்சோதி வலத்துறையும் சுடராழியும் பல்லாண்டு [டே
படைபோர் புக்கு முழங்குமப்பாஞ்சசன்னியமும் பல்லாண்

---

மூன்றும் பரிஹாரம் (எல்லாப்பாட்டுக்கு மித்யாதி). (முகவுரை. ஸ்ரீமுகங்களிலே "ஸ்ரீமதே ராமாநுஜாயநம:" என்று மங்களார்த்தமாக முன்னே சொல்லும் பாசுரம். அதில் அர்த்தஸித்தமாகையால் "அஸ்து" என்கிற க்ரியை இல்லாதாப்போலே இங்குமென்று கொள்வது; அதாவது - ப்ரபந்தாதியில் ‹‹ஆசீர்நமஸ்க்ரியா வஸ்துநிர்தேசோ வாZபி தந்முகம் - ஆசீர்நமஸ்க்ரியா வஸ்துநிர்தேஶோ வாZபி தந்முகம்" என்கிற ஸூத்ரந்யாயத்தாலே நமஸ்காராசீஸ்ஸுக்கள் வேண்டுகையால், மங்களார்த்தமாக "காப்பு" என்று பாட்டுக்களுக்கு முன்னே சொல்லப்படும் பாசுரமென்கை; ஆகையால் இதுக்கு க்ரியை வேண்டாவென்று கருத்து. அன்றிக்கே, முகவுரையாவது - ராஜக்ருஹங்களில் கர்ணிகர்கள் ஆய வ்யயங்களை எழுதும் பத்ரிகைகளுக்குமுன்னே இன்னவர்ஷம், இன்னமாஸம், என்றெழுதும் பாசுரம். அது தான் முதலடியில் ஒருகாலெழுதப்பட்டதாயினும் முடிய அந்வயித்துக் கிடக்குமிறே; அதுபோலே இப்பாட்டும் மேற்பாட்டுக்களுடைய அந்வயிக்கும்போது க்ரியையுண்டாய், நிராகாங்க்ஷமாகையாலே, மேலோடே அந்விதமாயிறே; ஆகையால், இந்தப்பாட்டில் ஒரு க்ரியையில்லாமலிருக்கிறதென்றுமாம். முகவுரை - வேதாந்தங்களில் ப்ரணவம்போலே இந்த காதா(गाथा)த்வயமுமிதிவா. (முகவரை) என்று பாடமாம்போது - நாயகக் கல்லுபோலே பாட்டுக்களுக்கெல்லாம் ப்ரகாசகமா யிருக்குமென்று அர்த்தவிசேஷ மருளிச்செய்தாரென்று கருத்து.

இரண்டாம்பாட்டு. (அடியோமோடு மித்யாதி). வ்ருத்தாநுவாத பூர்வமாக ஸங்கதி யருளிச்செய்கிறார் (கீழித்யாதி). "அடியோம் - மங்கை - ஆழி - அப்பாஞ்சசன்னியம்" என்கையாலே, உபயவிபூதியோகம் சொல்லிற்று.

**வ்யா.**—(அடியோமோடும் நின்னோடும் பிரிவின்றியாயிரம் பல்லாண்டு) (அடியோமோடும்) தம்மைப்பேணாதே மங்களாசாஸநம் பண்ணுகிற இவர், தம்முடைய நித்யதையை ப்ரார்த்திப்பானென்னென்னில்; ஒரு ஸாத்ய(ஷ்ய)த்தைக் குறித்து ஸாதநாநுஷ்டாநம் பண்ணுமவர்கள்(க) "ఆయురాశాస్తే-ஆயுராசாஸ்தே" என்று ஆயுஸ்ஸை தத(ஸ்)ங்கமாக ப்ரார்த்தியா நின்றார்களிறே; அதுபோலே, "மங்களாசாஸநத்துக்குத் தாம்வேணும்" என்று தம்மையுங் கூட்டிக்கொள்ளுகிறார் அத்தலைக்குப் பரிகைக்குத் தாமல்லது இல்லாமையாலே; தாமில்லாதபோது அத்தலைக்கு அபாயம் ஸித்தமென்றிருக்கிறாரிறே. ஆனால் என்னோடும் என்னாதே "அடியோமோடும்" என்பானென்னென்னில்; தேஹாத்மாபிமாநி, தேஹத்தில் ஆத்மபுத்தி பண்ணும்; மாயாவாதி, அஹங்காரத்தில் ஆத்மபுத்திபண்ணும்; ஸாங்க்யன், "అహమర్థం ప్రకృతేః పరం స్వయంప్రకాశం స్వతన్త్రమ్- அஹமர்த்தம் ப்ரக்ருதே:பரம் ஸ்வயம்ப்ரகாஶம் ஸ்வதந்த்ரம்" என்றிருக்கும்; அங்ஙன் கலங்கினவரன்றிறே இவர்; முறை யறியுமவராகையாலே "அடியோமோடும்" என்கிறார். "கர்மௌபாதிகமாக வந்த அவஸ்தைகளெல்லாம் மறைந்தாலும் மறையாத ஸ்வபாவம் தாஸ்யம்" என்றிருக்குமவ

---

நாலடியும் நாலு வாக்யங்களென்கைக்காக ப்ரதமோபாதாநம் (அடியோமித்யாதி). ப்ரதிபதார்த்த மருளிச்செய்வதாக புந: ப்ரதீகோபாதாநம் (அடியோமோடும்) என்றது. பல்லாண்டென்றது - தன்னைப்பாராதே அத்தலையில் ஸம்ருத்தி நித்யமாய்ச் செல்ல வேணுமென் றிருக்குமவன் வ்யவஹார மென்னாநின்றீர்; இங்கே "அடியோமோடும்" என்று தம்மைப்பேணக்கூடுமோ? என்கிற ஶங்கையை அநுவதித்து, இதுவும் அத்தலைக்காகவே யென்று த்ருஷ்டாந்தபூர்வகம் பரிஹரிக்கிறார் (தம்மை யித்யாதி வாக்ய சதுஷ்டயத்தாலே). தாமில்லாதபோது பரிவாரில்லையோ வென்ன, (அத்தலைக்கித்யாதி). வ்யாமோஹத்தாலே யென்று கருத்து. மேலே "நின்னோடும்" என்றிருக்கையாலே, அதுக்கநுகுணமாக என்னோடு மென்னாதொழிவானென்னென்கிற ஶங்கையை அநுவதித்து, அது ஸர்வ ஸாதாரண மாகையாலே விஶேஷிக்கவேணுமென்று பரிஹரிக்கிறார் (ஆனாலித்யாதி ஏழுவாக்யத்தாலே). (அஹங்காரத்திலே) அந்த:கரணத்திலே. (அஹமர்த்தம்) ஆத்மா. (முறை) ஶேஷத்வம். இவர்தெளிந்தவராகைக்கு ஶேஷத்வம் ஸ்வாபாவிகமோவென்ன, (கர்மௌபாதிகமித்யாதி).

---

(க) யஜு-அஷ்ட-௩-ப்ர-௫.

ரிறே இவர். ஆனால் "அடியோம்" என்கிற பஹுவசநத்துக்குக் கருத் தென்னென்னில்; தாம் தமியராய்நின்று மங்களாசாஸநம் பண்ணு மத்தால் பர்யாப்தி பிறவாமையாலும், ஸர்வாத்மாக்களுக்கும் சேஷத் வம் அவிசிஷ்டமாகையாலும், இப்ப்ரதிபத்தி அவர்களுக்கின்றிக்கே யிருக்கச்செய்தேயும் ஸ்வாபிப்ராயத்தாலே யருளிச்செய்கிறார். (நின் னோடும்) வ்யாவ்ருத்தமான சேஷித்வம் மங்களாவஹமாகையாலே ஸர்வரும் கூடிப்பரிந்தாலும் போராதபடியாயிறே யிருப்பது. இத் தால் - திவ்யாத்ம ஸ்வரூபத்தைப்பற்றி மங்களாசாஸநம் பண்ணுகி றார். (பிரிவின்றி) இரண்டுதலையும் நித்யமான வோபாதி, ஸம்பந்த மும் நித்யமாயிறே யிருப்பது; அதுவும் தம்முடைய மங்களாசாஸ நத்தாலே யுண்டாவதாக நினைத்திருக்கிறார். (ஆயிரம்பல்லாண்டு) கால தத்வமுள்ளதனையும் இஸ்ஸம்பந்தம் நித்யமாய்ச்செல்ல வேணு மென்கிறார்.

(வடிவாயித்யாதி) உண்டான அமங்களங்கள் போகைக்கும் இல் லாத மங்களங்களுண்டாகைக்கும் தன் கடாக்ஷமே அமைந்திருக்கிற

(ஆனால்) என்றது - இவரொருவருமே தெளிந்தவரானாலென்றபடி. இந்த ஶங்கைக்கு ஹேதுத்வயஸமுச்சயேந பரிஹாரம் (தமியரித்யாதி). (அவி சிஷ்டம்) விசேஷமின்றிக்கே எல்லார்க்கு மொத்திருக்கை. "அடியோ மோடும்" என்று சேஷபூதரைச் சொல்லி "நின்னோடும்" என்கையாலே, தத்ப்ரதிஸம்பந்திஶ்சேஷீ தாத்பர்யம் (வ்யாவ்ருத்தேத்யாதி). (வ்யாவ்ருத்த மான ஶேஷித்வம்) நிருபாதிக ஸர்வஶேஷித்வம். நீ மங்களஸம்பாதக னாகையாலே, சேதநரெல்லாரும் கூடிப்பரிந்தாலும் போராமையாலே அடி யோங்களைப்போலே நீயுமுன்னைப்பரிகைக்கு நித்யமாய்ச்செல்லவேணு மென்று இவ்வாக்யத்துக்குத் தாத்பர்யம். கீழ்ப்பாட்டில் "உன்செவ்வடி" என்று அத்தலைக்கு மங்களாஶாஸநம் பண்ணியிருக்க, புநঃ "நின்னோடும்" என்பானென்னென்னில், (இத்தாலித்யாதி). (இத்தால்) என்றது - "நின் னோடும்" என்றத்தாலே யென்றபடி. (பிரிவின்றி) என்றது-பிரிவின்றிக்கே யிருக்கையைச் சொல்லுகிறது. (க)"ஆக்கையுள்ளு மாவியுள்ளு மல்லபுறத் தினுள்ளும் நீக்கமின்றி யெங்குநின்றாய்" என்கிறபடியே, ஜீவ பர ஸம்பந்தம் நித்யமாயிருக்க, (பிரிவின்றி) என்றதுக்கு ப்ரஸக்தியேதென்ன வருளிச் செய்கிறார் (இரண்டுதலையுமித்யாதி).

இரண்டாம்பாதத்துக்கு ஶங்காஸமாதாந முகேநபாவம் (உண்டான வித்யாதி). (உண்டான அமங்களங்கள் போகைக்கும் இல்லாத மங்களங்க

(க) தி-வாய்-௭-௮-௬.

இவள், (க) "அகலகில்லேன் இறையும்" என்று நம்மைப் பிரியமாட்டாதேயிருக்க, நமக்கு வருவதொரு அமங்களமுண்டோ? என்றிய படுகிறீரென்ன; தேவரீரும் பிராட்டியுமானசேர்த்தி நித்யமாய்ச் செல்ல வேணுமென்று மங்களாசாஸநம் பண்ணுகிறார். (வடிவாய்) "வடிவு" என்று - நிறமாய், இவளோட்டைச் சேர்த்தியாலே திருமேனிக்குண்டான புகரைச் சொல்லுகிறது. (உ) [అప్రమేయంహి తత్తేజో యస్య సా జనకాత్మజా - அப்ரமேயம்ஹி தத்தேஜோ யஸ்யஸா ஜநகாத்மஜா] என்று - ஸ்ரீஜநகராஜன் திருமகளை எனக்கென்ன இட்டுப்பிறந்த தத்வத்தோடே எதிரிட்டு வெல்ல நினைக்கிறாயோ? என்றானிறே மாரீசன். (௩) "శ్రద్ధయా దేవో దేవత్వ మశ్నుతే - ஶ்ரத்தயா தேவோ தேவத்வ மஶ்நுதே" என்னக்கடவதிறே. ஆனால் இவளாலே அவனுக்கு உத்கர்ஷமாகில் அவனுடைய சேஷித்வம் குலையாதோ வென்னில்; மாணிக்கம் ஒளியாலே பெருவிலையனுங் காட்டில் மாணிக்கத்தினுடைய ப்ராதாந்ய மழியுமோ? பூ மணத்தாலே பெருவிலையனுங்காட்டில் பூவுக்கு ப்ராதாந்யமழியுமோ? (வடிவாய்) ஸ்ரீகௌஸ்துபாதிகள் போலே ஆபரணபூதையாய், அத்தால்வந்த அழகைச்சொல்லவுமாம். (நின்வலமார்பினில்) ஸர்வாதிகனான உன்னுடைய வலமார்பினில். *ஸர்வயஜ்ஞமயமாய்* யோகிசிந்த்யமாயிறே வடிவிருப்பது. (வலமார்

னுண்டாகைக்கும்) என்றது, ஆழ்வாருடைய ப்ரேமஸ்வபாவத்தைப்பற்ற; அன்றிக்கே, லோகத்தார்க்குண்டான அமங்களங்கள் போகைக்கும் என்று கூட்டுவது. "நின்வலமார்பினில் வாழ்கின்ற" என்கிறவிஶேஷணத்தைக்கடாக்ஷித்து, (தேவரீரும் பிராட்டியுமான சேர்த்தி) என்றது. அவனுடைய சேர்த்தி நிறங்கொடுக்கு மென்னுமதுக்கு ப்ரமாணம் (அப்ரமேயமித்யாதி). அப்ரமேயமென்றதுக்கு பாவம் (எதிரிட்டுவெல்ல நினைக்கிறாயோ)என்றது. ப்ரமாணாந்தரம் (ஶ்ரத்தயா இத்யாதி). (ஶேஷித்வம்) ப்ராதாந்யம். "வடிவாய்" என்றத்தை நிறமுடைத்தாயிருக்கிற என்று திருமார்புக்கு விஶேஷணமாக்கிக் கீழருளிச்செய்து "மங்கை" என்றதுக்கு விஶேஷணமாக்கி அர்த்தாந்தரம் (ஸ்ரீகௌஸ்துபேத்யாதி). "நின்" என்றதுக்குத்தாத்பர்யம் (ஸர்வேத்யாதி). ஸர்வாதிக்யத்துக்கு ப்ரமாணம் (ஸர்வயஜ்ஞேத்யாதி). இவ்வாக்யத்துக்குக்கருத்து-ஶ்ருதியினுடைய பூர்வோத்தர பாகங்களில் ப்ரதிபாத்யங்களான கர்மோபாஸநங்களுக்கு விஷயமிறே என்று. "மார்பு" என்றதுக்கு வாஸநை (ஸர்வயஜ்ஞேத்

(க) தி-வாய்-௬-௰-௰. (உ) ரா-ஆர-௩௭-௧௮. (௩) காடகே-௩-௧௧.

பினில்) அணைக்கைக்கு அணித்தாயிருக்கை. (வாழ்கின்ற) மார்விலிருப்புந்தானே நித்யமாய் போக (भोग)ரூபமாயிருக்கை. அம்மார்விலே யிருக்கச்செய்தேயும் "இறையும் - அகலகில்லேன்" என்று அதிசங்கை பண்ணும்படியிறே போக்யதை யிருப்பது. (மங்கையும்) (க) "युवतिश्च कुमारिणी - யுவதிஸ்ச குமாரிணீ" என்கிற பருவத்தைச் சொல்லுகிறது. (உ) "युवा कुमारः - யுவா குமாரः" என்று இவ்விரண்டவஸ்த்தையுமுண்டே அவனுக்கு; இவளுக்கு கௌமாராவஸ்த்தையால் வந்த மௌக்த்ய(मौग्ध्य)மேயுள்ளது, யுவதியுமாகக்கடவள் எங்ஙனேயென்னில்; போக(भोग)ஸ்ரோதஸ்ஸில்வந்தால் இவள் தளர்த்திக்கு அவன் கைகொடுக்க வேண்டும்படியான மௌக்த்யத்தைச் சொல்லுகிறது. "மங்கையும்" என்கிற ச(च)சப்தத்தாலே - மஹிஷ்யந்தரத்தைச் சொல்லுதல், மங்களாவஹையான இவளும் ஆசாஸ்யை என்னுதல். (பல்லாண்டு) காலதத்வமுள்ளதனையும் இச்சேர்த்தி நித்யமாய்ச் செல்லவேணும்.

(வடிவார்சோதி யித்யாதி) இச்சேர்த்திக்கு ஒரு தீங்குவாராதபடி கல்மதிளிட்டாற்போலே யிருக்கிற ஆழ்வார்களைப் பாரீரென்ன; அவர்

யாதி) என்னவுமாம். "வலம்" என்றதுக்கு வாஸனை (அணைக்கைக்கு இத்யாதி). (அணித்து) ஸமீபம், உறைகின்ற என்னாதே "வாழ்கின்ற" என்பானென்னென்ன, (மார்விலிருப்பு இத்யாதி). இதில் வர்த்தமாநார்த்தம் (நித்யமாயித்யாதி). போக(भोग)ரூபதையை உபபாதிக்கிறார் (அம்மார்விலே யித்யாதி). எடுத்த ப்ரமாணத்துக்குவ்யாவ்ருத்தி பூர்வகம் அர்த்தம் (யுவா குமாரः இத்யாதி). ச(च)காரத்தை அப்ராதாந்யத்திலேயாக்கி, யுவதியுமாகக் கடவள் என்கிறார் (இவளுக்கித்யாதி). (தளர்த்தி) ப்ரமம். அநுக்த ஸமுச்சயமாகவும் சேர்த்தியோடே ஸமுச்சயமாகவும் அருளிச்செய்கிறார் (சப்தத்தாலே யித்யாதி). (ஆசாஸ்யை) என்றது - மங்களாசாஸநத்துக்கு விஷயபூதை என்றபடி.

மூன்றாமடிக்கு சங்காஸமாதாநமுகேந தாத்பர்யம் (இச்சேர்த்திக்கித்யாதி). (இச்சேர்த்திக்கு) என்றது-மங்கையும் நானுமான சேர்த்திக்கென்றபடி. (ஆழ்வார்களை) என்ற பஹுவசநம் "மங்கையும்" என்ற விடத்தில் மஹிஷ்யந்தர ஸமுச்சயமாகச்சொன்னாற்போலே, இங்கும் "ஆழியும்" என்ற சகாரம் நந்தகாதிகளைச் சொல்லிற்றாகவுமொருயோஜநை திருவுள்ளம்பற்றியருளிச்செய்கிறாரென்று கண்டுகொள்வது. "வடிவு" என்றதுக்கு இரண்ட

(க)

(உ) ருக்வே-அஷ்ட-உ-அ-உரு.

களோட்டைச் சேர்த்திக்கு என்ன தீங்கு வருகிறதோ? என்று மங்களாசாஸநம் பண்ணுகிறார். (வடிவார்சோதி) காளமேகநிபஶ்யாமமான திருமேனி, ஸ்வதேஜஸ்ஸாலே வ்யாப்தமாம்படி யிருக்கை. (க) "புருஷம் க்ருஷ்ண பிங்களம் - புருஷம் க்ருஷ்ண பிங்களம்" என்னும்படியாயிறே யிருப்பது. தேஜோராசியா யிருக்கும் வடிவையுடையவனென்னவுமாம். (வலத்துறையும் சுடராழியும் பல்லாண்டு) வலவருகே நித்யவாஸம் பண்ணுமவனாய், பிறர்க்கு அநபிபவநீயனாயிருக்கிற ஆழ்வானோட்டைச் சேர்த்தி நித்யமாய்ச்செல்ல வேணுமென்கிறார். "ஆழியும்" என்கிற ச(ம்)சப்தத்தாலே - ஆயுதாகாரத்தாலே ரக்ஷகமாகக் காட்ட, ஆபரண புத்தியாலே அவனையுங்குறித்து மங்களாசாஸநம் பண்ணுகிறாரென்கை.

(படைபோரித்யாதி) நம் கையைவிடாதே, தீவ்நியாலே எதிரிகளை அழிக்கு மிவனைப்பாரீரென்ன; (படைபோர்புக்கு முழங்கும்) ஸேனையையுடைய யுத்தத்திலே புக்கு முழங்குமென்னுதல்; யுத்தத்திலே ஆயுதமாய்ப் புக்கு முழங்குமென்னுதல். (முழங்கும்) (உ) "ஸகோஷோ தார்த்தராஷ்ட்ராணாம் ஹ்ருதயானி வ்யதாரயத் - ஸகோஷோ தார்த்தராஷ்ட்ராணாம் ஹ்ருதயாநி வ்யதாரயத்" என்றும், (௩) "யஸ்யநாதேந

ர்த்தம்;- எம்பெருமான் திருமேனியாதல், ஆழ்வார் திருமேனியாதல். முதலர்த்தம்-(காளமேகேத்யாதி). (ஸ்வதேஜஸ்ஸாலே) என்றது - ஆழ்வாருடைய தேஜஸ்ஸாலே யென்றபடி. ஶ்யாமமான திருமேனியை ஆழ்வாருடைய தேஜஸ்ஸு முட்டாக்கிடுகையாலேவந்த பரபாகத்துக்கு ப்ரமாணம் (புருஷமித்யாதி). இரண்டாமர்த்தம் (தேஜோராஶிஇத்யாதி). [சோதி-ஆர்-வடிவு] என்று இப்பக்ஷத்தில் அந்வயம். சுடர் பததாத்பர்யம் (பிறர்க்கித்யாதி). ஆக "ஆழியும்" என்ற ச(ம்)காரத்தாலே சொல்லுகிற நந்தகாதிகளுடைய சேர்த்திக்கு மங்களாஶாஸநம் பண்ணுகிறாரென்று கருத்து. இந்த சகாரத்தை ப்ராதாந்யபரமாக்கி அர்த்தாந்தரம் அருளிச்செய்கிறார் (ஆழியுமித்யாதி). இப்போது ஆழிபதம் நந்தகாத்யுபலக்ஷணம்.

(நம் கையைவிடாதே) என்கையாலே திருவாழியை வ்யாவர்த்திக்கிறது. "படை"-ஸேனையும், ஆயுதமும். முதலர்த்தம் (ஸேனையை இத்யாதி). இரண்டாமர்த்தம் (யுத்தத்திலே யித்யாதி). இப்பக்ஷத்திலே போரிலே படையாகப்புக்கு என்றந்வயம். போர் - யுத்தம். (எதிரிகளை அழியச்செய்யும்) என்றதுக்கு ப்ரமாணங்கள் (ஸகோஷஇத்யாதி).

(க) பு-ஸூ- (உ) கீ-க-கக. (௩) வி-பு-ரு-உக-உக.

దైత్యానాం బలహానిర్జాయత - யஸ்யநாதேந தைத்யாநாம் பலஹாநிர்ஜா யத" என்றும் ப்ரதிகூலர் மண்ணுண்ணும்படியும் அநுகூலர் வாழும்படியுமாயிறே த்வநியிருப்பது. இத்த்வநி இவர்க்கு பயஸ்த்தாநமானபடி என்னென்னில்; த்வநிவழியே நின்று இடங்காட்டிக் கொடுக்குமென்று பயப்படுகிறார். (அப்பாஞ்சசன்னியமும்) முன்னிலையாயிருக்க பரோக்ஷ நிர்த்தேசம்பண்ணுவா னென்னென்னில்; புத்ரனை அலங்கரித்த தாய் "தன்கண்படிலும் கண்ணெச்சிலாம்" என்று பார்க்கக்கூசுமாபோலே, மங்களாசாஸநம் பண்ணுகிற தம்முடைய கண்ணையும் செறித்து முகத்தை மாறவைத்துச் சொல்லுகிறார். அன்று யுத்தத்திற்பிறந்த ப்ரமாதத்துக்கு இன்று மங்களாசாஸநம் பண்ணுகிறாரென்றுமாம்.

இவ்விரண்டுபாட்டும்-திருமந்த்ரார்த்தமாயிருக்கிறது. "அடியோயோடும்" என்கிற விடத்தாலே - ப்ரணவார்த்தத்தைச் சொல்லிற்று; முதற்பாட்டில் "பல்லாண்டு" என்கிற ப்ரதமபதத்தாலே-நமஶ்ஶப்தார்த்தம்சொல்லிற்று; "மல்லாண்டதிண்டோள் மணிவண்ணா" என்று- அப்பாட்டில் விக்ரஹயோகத்தையும், சௌர்ய வீர்யாதி குணயோகத்தையும், இரண்டாம்பாட்டில் விபூதியோகத்தையும் சொல்லுகையாலே-நாராயண சப்தார்த்தம் சொல்லிற்று; "உன்செவ்வடி செவ்வி திருக்காப்பு" என்கையாலே - சதுர்த்தியில் ப்ரார்த்திக்கிற அர்த்தத்தைச் சொல்லிற்றாய்த்து. ... ... ... ... ... (௨)

---

(செறித்து) நெருக்கி; மூடியென்றபடி. முகத்தை மாறவைத்து பரோக்ஷ நிர்த்தேஶம் பண்ணினா ரென்றார்கீழ், பூர்வ வ்ருத்தாந்தத்தைப்பற்றத் தாத்பர்யாந்தரம் (அன்றுயுத்தத்திலித்யாதி).

தத்ஸஹித புருஷார்த்த ப்ரதிபாதகமான திருமந்த்ரார்த்தமென்று ப்ரதிஜ்ஞைபண்ணிநின்றுகொண்டு பதங்களிலே எறிட்டுக்காட்டுகிறார் (இவ்விரண்டு இத்யாதி அஞ்சுவாக்யத்தாலே). (அடியோமோடுமென்கிற இடத்தாலே) என்றது - இங்குமுதலடியாலே யென்றபடி. முதற்பாட்டு வ்யாக்யாநத்திலே "பல்லாண்டு" என்கிறஶப்தம், ஸ்வரூபத்தையும், ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தியையும் ப்ரகாசிப்பிக்குமென்று அருளிச்செய்திருந்தாரேயாகிலும், நமஶ்ஶப்தம்போலே யிருப்பதொன்றாகையாலே உபாயத்தைக் காட்டக்கடவதென்று திருவுள்ளம்பற்றி "நமஶ்ஶப்தார்த்தம் சொல்லிற்று" என்கிறார் இங்கே. "அடியோமோடும்" என்ற இடத்தில் ஸ்வரூபமும் "திருக்காப்பு" என்ற இடத்தில் வ்ருத்தியைச் சொல்லுகிறதென்று மிருக்கையாலே இப்படிகொள்ளவேணும். ... ... (௨)

அவ.—மூன்றும்பாட்டு. (வாழாளித்யாதி) கீழிரண்டு பாட்டாலே தாம் திருப்பல்லாண்டு பாடினார்; இனிமேல், தம்முடைய மங்களாசாஸநத்தாலே தமக்குப் பர்யாப்தி பிறவாமையாலே, (க) "சதுர்வ்தா பஜந்தே மாம்-சதுர்விதா பஜந்தே மாம்" என்கிறபடியே ஐஶ்வர்ய கைவல்ய பகவச்சரணார்த்திகள் மூவரையும் கூட்டிக்கொள்வாராக நினைத்து, அதில் மங்களாசாஸநத்துக்கு பகவத்ப்ராப்திகாமர் ப்ரத்யாஸந்நராகையாலே அவர்களை அழைக்கிறார்.—(உ) "ஏகஸ்ஸ்வாது நபுஞ்ஜீத- ஏகஸ்ஸ்வாது நபுஞ்ஜீத" என்கிற ந்யாயத்தாலே - "இம்மங்களாசாஸநம் எல்லாரும் புஜிக்கவேணும்" என்னும் நினைவாலே அழைக்கிறாரென்றுமாம்;— அவர்களோடேகூட மங்களாசாஸநம் பண்ணுகை தமக்கு தா(தா)ரகமாகையாலே யென்றுமாம். (௩) "அடியார் தங்கள் இன்பமிகு பெருங்குழுவுகண்டு" என்றும், (௪) "அடியார்கள் குழாங்களை - உடன் கூடுவதென்றுகொலோ" என்றும் - கண்ணாலே காண்கையும் அத்திரளிலே புகுருகையும் இவையெல்லாம் உத்தேஶ்யமாயிறே யிருப்பது. ... ... ... ... ... ... *

---

மூன்றும்பாட்டு. (வாழாளித்யாதி) கீழிரண்டு பாட்டுக்கும், மேல் மூன்றுபாட்டுக்கு மாக, பேடிகாஸங்கதி யருளிச்செய்துகொண்டு, இப்பாட்டில் முதலடியைக் கடாக்ஷித்து, (க) "ஆர்த்தோ ஜிஜ்ஞாஸு:- ஆர்த்தோ ஜிஜ்ஞாஸு:" என்கிற ப்ரமாணத்தில், பிற்பட்டவர்கள் முற்பட்டதுக்கு ஹேதுவைச் சொல்லிக்கொண்டு அவதாரிகை (கீழிரண்டு இத்யாதி). (க) "சதுர்விதா:- சதுர்விதா:" என்றதை மூவராகச்சொன்னது - ஆர்த்தனையும், அர்த்தார்த்தியையும் ஒருகோடியாக நினைத்து.—அவதாரிகாந்தரம் (ஏக இத்யாதி).—மூன்றுமவதாரிகை (அவர்களித்யாதி). மேல்வாக்யத்தில் 'காண்கையும்-புகுருகையும்" என்று சொல்லுகையாலே, இங்கேயும் அவர்களைக்கண்டு அவர்களோடே கூடவென்று கூட்டுவது. ஆக இவர்களை அழைக்கைக்கு ஹேதுமூன்று; அதாவது-அத்தலையில் வைலக்ஷண்யத்தைப் பற்றிவரும் தம்முடைய அபர்யாப்தியாதல், ஸ்வாதுதமமான இதிலுண்டான இவர்களிழவைப்பற்றி யாதல், இவர்களோடே கூடாதபோது தம் செல்லாமையைப்பற்றியாதல். மூன்றும் ஹேதுவை ப்ரமாணபூர்வகமாக த்ருடீகரிக்கிறார் (அடியாரித்யாதி). (குழுவு) ஸமூஹம்.

---

(க) கீதை-எ-௧௬. (உ) பார-உத்யோ-௩௨-௫௦.
(௩) பெரு-திரு-௧-௧௦. (௪) தி-வாய்-உ-௩-௧௦.

ஆ.—

வாழாள்பட்டு நின்றீருள்ளீரேல் வந்து மண்ணும் மணமும் கொண்மின்
கூழாட்பட்டு நின்றீர்களை யெங்கள் குழுவினிற் புகுதலொட்டோம்
ஏழாட்காலும் பழிப்பிலோம் நாங்க ளிராக்கதர்வாழிலங்கை
பாழாளாகப் படைபொருதானுக்குப் பல்லாண்டுகூறுதுமே. (௩)

வ்யா.—(வாழாள்) என்று - நிரதிசயஸுகரூபமான வ்ருத்தியைச்சொல்லுகிறது. வ்யதிரிக்த விஷயங்களிலடிமை துராராதமாகையாலும், அஸுகமாகையாலும், அத்யல்ப பலமாகையாலும், துக்கரூபமாயிறே யிருப்பது. (௧) "ஸர்வம் பரவஶம் து:க்கம் - ஸர்வம் பரவசம் துக்கம்"(௨) "ஸேவா ஶ்வவ்ருத்தி:- ஸேவா ஶ்வவ்ருத்தி:" என்னக்கடவதிறே. இவ்விஷயந்தன்னிலும் ப்ரயோஜநாந்தரபரராயிழிந்தால் பலம் பந்த(பந்த)கமாகையாலும், அநந்யப்ரயோஜநரோபாதி அநவரதபாவனையும் அந்திமப்ரத்யயமும் வேண்டுகையாலும் துக்கப்ராயமாயிருக்கும்; ஸாதநாந்தர நிஷ்டனுக்கும் கர்த்தவ்ய புத்தியாலே ரஸமில்லை. இக்குறைகளொன்று மின்றிக்கே, ப்ராப்தவிஷயத்திலே தன்னைப்பேணாதே பரஸம்ருத்தியை ஆசாஸிக்க, ஸர்வநிரபேக்ஷனான ஈஶ்வரன் இத்தைக்கண்டு "இதொரு ப்ரேமஸ்வபாவமிருந்தபடி யெ

"ஆள்" என்றதுக்கு வாழ்ச்சியை நிரூபகமாகச் சொல்லுமிடத்தில் அவதிசொல்லாமையாலே, வேறு இதில் விஞ்சினதில்லையென்று பலிக்கிறது, அத்தை யருளிச்செய்கிறார் (நிரதிஶயேத்யாதி). இப்படி விசேஷிப்பானென், உகந்த விஷயத்துக்கு சேஷமாயிருக்கை ஸுகரூபமாகவன்றோ தோற்றுவதென்ன, (வ்யதிரிக்தேத்யாதி). (துராராதம்) என்றது-துராராத விஷயமென்றபடி. இதரஸேவை து:க்கரூபமாகில் பகவத்விஷயந்தானெல்லார்க்கும் ஸுகமாயிருக்குமோவென்ன, (இவ்விஷய மித்யாதி). இவ்விஷயம் தன்னிலும் அடிமையென்று சேஷம். (அநந்யப்ரயோஜநன்) என்றது-உபாஸகனை. (அந்திம ப்ரத்யயமாவது) அந்திம ஸ்ம்ருதி. (ப்ராப்தம்) என்றது - இதர விஷயங்களை வ்யாவர்த்திக்கைக்காக. (ஸாதநாந்தர நிஷ்டனுக்கும்) என்றது - கீழ் அநந்யப்ரயோஜநனைச் சொன்ன உபாஸகனுக்கும் என்றபடி. (கர்த்தவ்யபுத்தி) என்றது - சாஸ்த்ர விஹிதமென்கிற நினைவு என்றபடி. ஆக இவ்வளவும் வ்யாவர்த்யங்களை யருளிச்செய்து நிரதிசய ஸுகரூபத்தையும் உபபாதிக்கிறார் (இக்குறைகளித்யாதி). (இக்குறைகளொன்றுமின்றிக்கே) என்றதுக்கு—(அந்த ப்ரீதியே புருஷார்த்தமாயிறே யிருப்பது) என்றதனோடு அந்வயம். (நிரபேக்ஷனான) என்றது - ஸம்ருத்தியில் ஸர்வஹேது நிரபேக்ஷனான என்றபடி. ஆளாகி என்

(௧) மநு-௪-௧௬௦. (௨) மநு-௪-௬.

ன்" என்று ப்ரீதனாக, இவனுக்கு அந்த ப்ரீதியே புருஷார்த்தமாயிரே யிருப்பது. (பட்டு) என்றது - "உவர்க்கடலில் முத்துப்பட்டது" என்னுமாபோலே. "நான்" "எனக்கு" என்றிருக்கிற ஸம்ஸாரத்திலே பகவத்ஸம்ருத்தியை ஆசாஸிக்கும்படி கையொழிந்திருப்பார் சிலரைப் பெறுகையாவது அலப்ய(ஞ)லாபமென்னுமிடந்தோற்ற வருளிச்செய்கிறார். (நின்றீர்) வாயுபரவசமாய்த் திரிகிற த்ருணம்போலே கர்மபாரதந்த்ரனாய்த் திரிகிற ஸம்ஸாரி சேதநனுக்கு பகவத்ஜ்ஞாநபூர்வகமாக தத்ஸம்ருத்தியை ஆசாஸிக்கப்பெற்றலிறே ஸ்த்திதியுண்டாவது. (உள்ளீரேல்) (க)"ஸமஹாத்மா ஸுதுர்லப:—ஸமஹாத்மா ஸுதுர்லப:" என்று- அநந்யப்ரயோஜநரைக் கிடையாதென்று ஸர்வேஸ்வரன் கைவிட்ட ஸம்ஸாரமாகையாலே மங்களாசாஸநத்துக்கு ஆள்தேட்டமாயிறே யிருப்பது. நாகபாசத்தினன்று அடைய மோஹித்துக் கிடக்க, திருவடியும் ஸ்ரீவிபீஷணாழ்வானும் "ப்ராணனுடையாருண்டோ" என்று தேடினாப்போலே, ஸம்ஸாரத்தில் ஸ்வரூபஜ்ஞாநமுடையார் தேட்டமாயிறே யிருப்பது. இந்த ய(ß)திசப்தத்தாலே - ஸம்ஸாரத்தில் வைஷ்ணவத்வம் துர்லபமென்றதாய்த்து.

அநந்யப்ரயோஜநரான வைஷ்ணவர்களும் "நம்மை விரும்புவார் சிலருண்டாவதே" என்று ஸங்கிஹிதராக;(வந்து) அவர்களுடைய ஸ்வரூபஸ்வபாவம் ஆராய்வதற்கு முன்பே அவர்களோடே கலந்துகொடு நிற்கவேண்டும்படியான த்வரை சொல்லுகிறது. (மண்ணும் மணமுங்கொண்மின்) என்கிறார். மண்ணுக்கும் மணத்துக்கும் உரி

ஞமல் "ஆட்பட்டு" என்பானென்னென்னில்; த்ருஷ்டாந்தமுகேந அருளிச்செய்கிறார் (பட்டு என்றது) இத்யாதி. போலே யிருக்கிறதென்று சேஷம். (உவர்க்கடல்) லவணப்தி. இத்தை விவரிக்கிறார் (நானெனக்கித்யாதி). (நான்) என்றது - அஹங்காரம். (எனக்கு) என்றது - மமகாரம். இப்போது "நின்றீர்" என்கையாலே, முன்பு நில்லாமை தோற்றுகிறது;-அத்தை விவரிக்கிறார் (வாயு இத்யாதி). "ஏல்" என்கிற யத்ய(ர்)த்தத்தை ஸப்ரமாணமாக உபபாதிக்கிறார் (ஸமஹாத்மா இத்யாதி). (அநந்யப்ரயோஜநர்) மங்களாஸாஸநபரர். இதுக்கு த்ருஷ்டாந்தம் (நாகபாஸ இத்யாதி). நாகபாசத்தினன்று அடையமோஹித்த தில்லாமையாலே, (நாகபாஸத்தினன்று) என்றது - ப்ரஹ்மாஸ்த்ர பந்தநத்தினன்று என்றபடி. பலிதம் (இந்தஇத்யாதி).

மேலுக்கவதாரிகை (அநந்யேத்யாதி). (உரியார்) ப்ராப்தரானவர்.

(க) கீ-எ-க௯.

யார் அந்தரங்கரான அடியாரிறே. அடிமை விலையோலை எழுதும் போதும் "மண்ணுக்கும் மணத்துக்கும் உரியனாக வேணும்" என்றிறே எழுதுவது. மண்ணாவது - ஸ்வாமிக்கு ஒரு மங்களமுண்டானால் அங்குரார்ப்பணத்துக்குப் புழுதிமண் சுமக்கை; அந்த ந்யாயத்தாலேயிறே நம் ஆழ்வார்களுக்கு இது க்ருத்யமாகிறது. மணமாவது - அந்தக் கல்யாணத்துக்குத் தான் அபிமாநியாயிருக்கை. இவ்விரண்டும் - ஸர்வ கைங்கர்யத்துக்கு முபலக்ஷணம். "கொண்மின்" என்றத்தால் - அடிமை செய்யுமிடத்தில் கிடந்தானை கண்டேறுகையன்றிக்கே சிலர் தரக் கொள்ளவேணும் என்கையும், தருமவர்களும் "உங்களதான அடிமையை நீங்கள் ஸ்வீகரியுங்கோள்" என்று சீரிதாகக் கொடுக்கக் கடவர்களென்கையுமாகிற சாஸ்த்ரார்த்தத்தை வெளியிடுகிறது.

(கூழாளித்யாதி) ‡இவர் அழைத்தவாசி யறியாதே ப்ரயோஜநாந்

---

உக்தார்த்தத்தை லோகவ்யவஹாரமுகேந த்ருடீகரிக்கிறார் (அடிமை யித்யாதி). (விலையோலை) - க்ரயபத்ரம். (மண்ணாவது) என்றது - மண்கொள்ளுகையாவது என்றபடி. (அந்த ந்யாயத்தாலே) விலையோலை யெழுதுகிற ந்யாயத்தாலே யென்றபடி. (நம் ஆழ்வார்கள்) என்றது - ஸேனை முதலியாரையும், திருவாழி யாழ்வானையும். அங்குரார்ப்பணத்தினன்றைக்கு "ஆழ்வார் திருநாள்" என்றிறே ப்ரஸித்தி. (மணமாவது) என்றது-மணங்கொள்ளுகை யாவதென்றபடி. செய்ம்மின் என்றுதல், வாங்குமின் என்றுதல் சொல்லாதே, "கொண்மின்" என்றதுக்குத் தாத்பர்யம் (கொண்மின் இத்யாதி). இத்தால் கொள்வாரும் கொடுப்பாரும் நிரஹங்காரராய் நிர்மமகாரரா யிருக்கையைச் சொல்லுகிறதென்று கருத்து. (கிடந்தானை கண்டேறுகை) என்றது - படுத்துக்கொண்டிருக்கிற யானையைத் தானேயேறுகை. (சீரிதாக) ஸாதரமாக.† (கொடுக்கக்கடவர்கள்) என்ற அநந்தரம், என்கையும் என்று சேஷம். (சாஸ்த்ரார்த்தம்) என்றது - தா(த)த்ருத்வத்திலும் ப்ரதிக்ருஹீத்ருத்வத்திலும் மமகார நிவ்ருத்தியைச் சொல்லுகிற திருமந்த்ரார்த்த மென்றபடி.

"கூழாள்" இத்யாதிகளுக்கு பாவம் (இவ்வார்த்தை யித்யாதி). (இவ்வார்த்தை) என்றது - வாழாட்பட்டு என்கிறவார்த்தை. (வாசியறியாதே) என்றது-தங்களுடைய ப்ரயோஜநாந்தரங்களும் வாழ்ச்சியென்று ப்ர(ஞ்)மித்து, அநந்யப்ரயோஜநரை அழைத்தாரென்கிற விசேஷமறியாதேயென்

---

† குண்டலித அரும்பதாநுகுணமாக வ்யாக்யாநத்தில் "என்கையும்" என்ற பாடமில்லை. ‡ அரும்பதத்துக்கு "இவ்வார்த்தை" என்று பாடம்.

தரபராடையப் புகுரத் தொடங்கிற்று; அவர்களை நிஷேதிக்கிறார். "கூழாள்" என்று - சோற்றுக்காக ஆரேனுக்கும் தன்னை எழுதிக்கொடுக்கை; இது ப்ரயோஜநாந்தரபரர்க்கு முபலக்ஷணம். தன்னை "பகவத்தாஸ்யைகபோ(ர்)கன்" என்னுமிட மறியாதே, ப்ரயோஜநாந்தரங்களைக் குறித்து அவன்றன்னையே ஆஸ்ரயிக்கிறார்களிறே. "கூழாள்" என்று - அநந்ய ப்ரயோஜநராயிழிந்து, ப்ரயோஜநாந்தரங்களை வேண்டிக்கொள்ளும் இருகரையரைச் சொல்லுகிற தென்றுமாம். "பட்டு" என்கிறது- அகப்பட்டென்றபடி. அதாவது - பந்த(ஸ்)கமாகையாலே ஸ்வரூபவிரோதியாய் அநர்த்தத்தைப் பண்ணுமென்னுமத்தாலே சொல்லுகிறது. (நின்றீர்களை) பஹுவசநத்தாலே "உள்ளீரேல்" என்று தேடவேண்டாதே பார்த்த பார்த்தவிடமெங்கும் ப்ரயோஜநாந்தரபரராயிருக்கை."எங்கள்குழு"என்று இத்திரளுக்குண்டான வ்யாவ்ருத்தி தோற்றவருளிச்செய்கிறார். தேஹாத்மாபி(மா)மாநிகள், தேவதாந்தரப்ரவணர், இவ்விஷயந்தன்னிலே புகுந்து ப்ரயோஜநாந்தரங்களை அபேக்ஷிப்பார், அநந்யப்ரயோஜநராய் ஸாதநாந்தரங்களிலே அந்யபரராயிருப்பாராகிற திரள்களெல்லாவற்றிலும் வ்யாவ்ருத்தமாயன்றோ எங்கள் திரளிருப்பதென்கிறார். (புகுதலொட்டோம்) "ஆரோபுகுவார்" என்று ப்ரார்த்திக்கிற இவர், நிர்த்த(ர்)யரைப்போலே "புகுரவொட்டோம்" என்பானென்னென்னில்; வஸிஷ்ட்டன் பரமதயாளுவானு

---

றபடி. (இது) என்றது - "கூழ்" என்றத்தை. ஈஸ்வரனுக்கு எழுதிக்கொடுப்பார் அந்யப்ரயோஜநங்களைக் கேட்பாரோவென்ன, (தன்னை யித்யாதி). இது - வித்த(ர்)வ்யாக்யாத்ரு வாக்யமாதல், ப்ரமித்தவர்களன்றிக்கே அநந்யப்ரயோஜநராய் வந்து ப்ரயோஜநாந்தரங்களைக் கொள்வாரை நிஷேதிக்கிறாரென்று அர்த்தாந்தரம் (கூழா ளித்யாதி). "பட்டு" என்றது - கீழும் இங்கும் ஒத்திருக்க, இங்கு (அகப்பட்டு) என்பானென்னென்ன, (பந்தகேத்யாதி). "நாங்கள்" என்று அஹங்கரிக்கலாமோவென்ன, (எங்களித்யாதி). வ்யாவ்ருத்தியை உபபாதிக்கிறார் (தேஹேத்யாதி). அவதாரிகையிலே தம்முடைய அபர்யாப்தியாலே சதுர்வித புருஷர்களையும் அழைக்கிறாரென்றுநின்றீர், ஆனால் "புகுதலொட்டோம்" என்னக்கூடுமோ? என்கிற ஸங்கையை அநுவதித்துப் பரிஹரிக்கிறார் (ஆரோ இத்யாதி).இந்தப் பரிஹாரத்துக்கு,அவர்கள் திருந்தாதே கேவல ப்ரயோஜநாந்தர பரராயிருந்தால் த்யாஜ்யரென்று கருத்து. "புகுதலொ

லும் சண்டாளனை அக்நிகார்யத்திலே கூட்டிக்கொள்ளானிறே. இத்தால் - அநந்ய ப்ரயோஜநர்க்கு ப்ரயோஜநாந்தரபரரோட்டை ஸஹவாஸம் அஸஹ்யமா யிருக்குமென்றதாய்த்து.

எங்கள் திரளிற்காட்டிலும் உங்கள்திரளுக்கு வாசியென்னென்னில், (ஏழாள் காலும் பழிப்பிலோம் நாங்கள்) என்கிறார். "ஏழாள்" என்று-தமக்குக் கீழே ஒருமூன்றும், மேலே ஒருமூன்றும், தாமுமாக ஏழுபடியைச் சொல்லுகிறது. இஸ்ஸமுதாயத்தைப்பற்றி சாஸ்த்ரங்கள் (க) "సప్త సప్తచ సప్తచ - ஸப்த ஸப்தச ஸப்தச" என்று - இந்த ஏழையும், இதுக்குக்கீழே ஒரேழையும், இதுக்குமேலே ஒரேழையும், ஆக, இருபத்தொருபடிகாலைச் சொல்லுகிறது. (உ) "దశపూర్వాన్ దశాపరాన్ ఆత్మానఞ్చైకవింశతిం పఙ్క్తిఞ్చ పునాతి - தசபூர்வாந் தசாபராநாத்மாநஞ்சைகவிம்சதிம் பங்க்திஞ்ச புநாதி" என்று முகபே(தே)தேந சாஸ்த்ரம் சொல்லிற்று. "ஏழாட்காலும்" என்கிற சப்தம் இவ்வளவை நினைக்கிறது. இத்தால் - ஒருஸந்தாநத்திலே ஒருவன் அநந்யப்ரயோஜநனானால், அவனைப்பற்றி, பகவத்ப்ரபாவம், ஸம்பந்தி ஸம்பந்திகளளவும் செல்லக் கீழும்மேலும் வெள்ளமிடுமென்கிறது. (பழிப்பிலோம்) விஷயாந்தரப்ராவண்யமென்ன, தேவதாந்தரபஜநமென்ன,

ட்டோம்" என்றத்தாலே ஸ்வரூபசிக்ஷை செய்தருளுகிறாரென்கிறார். (இத்தாலித்யாதி).

இத்தால் ஏழுதலை முறையைச்சொல்லுகிறாரென்கிறார் (ஏழாள் இத்யாதி). கர்மகாதாநாதி ஸாமாந்ய தர்மங்களுக்கு இருபத்தொரு தலைமுறைக்கு அதிசயகரத்வம்சொல்லி யிருக்க, "ஏழ்படி" என்று பகவத்ப்ரபாவத்தைக்குறையச் சொல்லக்கூடுமோ வென்ன, (இஸ்ஸமுதாயேத்யாதி). (இஸ்ஸமுதாயத்தைப்பற்றி) என்றது - கீழ்ச்சொன்ன ஸப்தகத்தை மத்யமாவதியாக்கி யென்றபடி. "ஆள்" என்று-புருஷர்களைச் சொல்லுகிறது. "கால்" என்றது - ஸந்ததி. (இவ்வளவை) என்றது - இருபத்தொரு படியை. ஓரேழுக்குச் சொன்னது, மற்றவற்றுக்கும் உபலக்ஷணம். ஸாமாந்ய தர்மத்துக்கு இத்தனை யுண்டானால், பகவந்நிஷ்டைக்குச் சொல்லவேண்டாவிறே யென்று கருத்து. பலிதார்த்தத்தை யருளிச்செய்கிறார் (இத்தாலித்யாதி). "பழிப்பு" என்பது - தோஷம். இது ஸாமாந்ய ஶப்தமாகையாலே, விஷயாந்தர ப்ராவண்யாதிகளைச் சொன்னாலும், ப்ரயோஜநாந்தரபரரானவர்களுக்கும் த்யாஜ்யமானவை அப்ரஸக்த மென்றுநின்றுகொண்டு, விசேஷபர்யவஸாநம் பண்ணுகிறார் (விஷயாந்தரேத்யாதி வாக்ய

(க) பார-

(உ) போதா-

இவை தூரதோகிரஸ்தமாகையாலே, பதர் கூட்டித்தூற்றவேண்டா; இனி அநந்யப்ரயோஜநராய் அநந்யஸாதநராயிருப்பார்க்குப் பழிப்பாவது-ப்ரயோஜநாந்தரபரதையும் ஸாதநாந்தர பரதையுமிறே; அவற்றை யுடையோமல்லோமென்கிறார்; (நாங்கள்) "எங்கள் குழு" என்ற போதைச் செருக்குப்போலே, பகவத்விஷயீகாரத்தால் வந்த செருக்குத் தோற்றச் சொல்லுகிறாரிறே.

உங்கள் ஸ்வரூபம் நீங்கள்சொன்னவளவிலே விஸ்வஸித்திருக்கு மத்தனை யளவுடையோமல்லோம், உங்கள் வ்ருத்தி விசேஷத்தைக் கொண்டு உங்களைஅறியவேணுமென்ன; அது நீங்களறியும் புடையல்ல, எங்ஙனேயென்னில்; ஒருகார்யப்பாடாக உள்ளஅமங்களங்கள் போக மங்களாசாஸநம் பண்ணும்படியாதல்,இல்லாத மங்களங்களுண்டாக வேணுமென்று மங்களாசாஸநம் பண்ணுதல் செய்யுமளவிறே நீங்களறிவது; முன்பு வ்ருத்தமாய்க்கழிந்த செயலுக்கு இன்றிருந்து வயிறுபிடிக்கும் திரள்காண் எங்களது. (இராக்கதர்வாழிலங்கை) துர்வர்க்கம் களித்துவர்த்திக்கும் தேசம், புறம்பேபோய் பரஹிம்ஸை பண்ணி, குளவிக்கூடுபோலே திரண்டு கடலையும் மதிளையும் அரணுக்கி, அமணக்கூத்தடிக்கும் தேசமென்கை. (இலங்கைபாழாளாக) லங்கையில் ஆள் பாழாம்படியாக. இலங்கைதான் விபீஷண விதேய

---

த்ரயத்தாலே). "பழிப்பிலோம்" என்றபோதே நாங்கள் என்று ஸித்த மன்றோ, விசேஷிப்பானென்னென்ன, (எங்களித்யாதி). "எங்கள்" என்ற இடத்தில் வ்யாவ்ருத்தி சொல்லுகையும் செருக்காலே யென்று கண்டுகொள்வது.

மேலுக்கு அவதாரிகை (உங்களித்யாதி). (அளவு) ஜ்ஞாநம். (புடை) ப்ரகாரம். (கார்யப்பாடாக) ப்ரயோஜந நிமித்தமாக. (முன்பு வ்ருத்தமாய்) என்று விசேஷித்தது, யுகாந்தரவ்யவதாநம் தோற்றுகைக்காக. (எங்களது) என்ற அநந்தரம் என்கிறுரென்று சேஷம். "இராக்கதர்" - ராக்ஷஸர். கீழ்வாக்ய விவரணம் (புறம்பேயித்யாதி). (குளவி) கீடவிசேஷம். "இலங்கை" என்கையாலே அர்த்தஸித்தம், (கடலையும் மதிளையும் அரணுக்கி) என்றது. "வாழ்" என்றதிலே நோக்காக (அமணக்கூத்து) என்றது; அதாவது-லஜ்ஜையின்றிக்கே நக்நதையோடே கூத்தாடுகை. இலங்கை பாழ் ஆக என்னுதே, "ஆள் பாழ் ஆக" என்பானென்னென்ன, (இலங்கைதானித்யாதி ). ஸ்ரீ விபீஷணுழ்வானுக்கு லங்காதிபத்யம் கடற்

மிறே. இனி, (௧) "ననమేయమ్ - நநமேயம்" என்ற ராவணனையும் அவ
னுடைய அதிக்ரமத்துக்குத் துணையான ராக்ஷஸரையு மழியச்செய்
து, (௨) "శ్మశాన సదృశీ భవేత్ - ஶ்மஶாந ஸத்ருஶீ பவேத்" என்று
பிராட்டி அருளிச்செய்தபடியே அவ்வூரை மூலையடியே போம்படி
பண்ணினான். (படைபொருதானுக்கு) இப்படிசெய்தது ஈஶ்வரத்
வப் பிடாரான ஸங்கல்பத்தாலன்றிக்கே, எதிரிகளம்பு மார்விலே தை
க்கும்படி பொருதவனுக்கு. (பல்லாண்டு கூறுதுமே) அப்போதை
கையும் வில்லுமாய்ச் சீறிச் சிவந்து எதிரிகள்மேலே வ்யாபரிக்கும்
போதை ஆகர்ஷகமான வடிவழகுக்கு மங்களாசாஸநம்பண்ணிப் போ
ருவோம் சிலர்காண் நாங்களென்கிறார். (௩) "రాఘవార్థే పరాక్రాన్తాః—
నప్రాణే †కురుతే దయామ్ - ராகவார்த்தே பராக்ராந்தா:—நப்ராணே குரு
தே தயாம்" என்கிறபடியே அக்காலத்தில் முதலிகளுக்கு அம்புக்கு
இருக்கப்பணி போருகையாலே அக்காலத்திலே மங்களாசாஸநம்

---

கரையிலே கொடுக்கையாலே, அத்தை அழிக்கவொண்ணாதென்று இவ்வா
க்யத்துக்குத் தாத்பர்யம். ஆனால் ஆள்பாழாம்படி பண்ணுவானென்
னென்ன, (இனி நநமேயமித்யாதி). (அதிக்ரமம்) மர்யாதாதிக்ரமம். [அ
ழியச்செய்து - போம்படி பண்ணினான்] என்று அந்வயம். "படைபொரு
தானுக்கு" படையிலே பொருதானுக்கு - யுத்தத்திலே சத்ரு ஸம்ஹாரம்
பண்ணினவனுக் கென்றபடி. படை - யுத்தம்; ஆயுதமாகவுமாம். இப்
படி விசேஷித்ததுக்கு வ்யாவர்த்த்ய பூர்வகமாகத் தாத்பர்யம் (இப்படி
யித்யாதி). (பிடார்) அஹங்காரம். (ஸங்கல்பத்தாலே) என்றது - "ஹநி
ஷ்யாமி" என்கிற ஸங்கல்பத்தாலே யென்றபடி. "பொருதானுக்கு" என்
றத்தைக் கடாக்ஷித்து பாவம் (அப்போதை இத்யாதி). "கூறுதும்"-சொ
ல்லுவோம், இப்படி நீங்கள் கழிந்தகாலத்திற் செயல்களுக்கு மங்களா
சாஸநம் பண்ணுவானென், அக்காலத்தில் பரிவரானவர்கள் மங்களாசா
ஸநம் பண்ணியிரார்களோ வென்ன, (ராகவார்த்தே இத்யாதி). "தயாம்
நகுருதே" என்றது அப்ரஸக்தப்ரதிஷேத மல்லாமையால், ப்ராணன்களி
லே தயைபண்ணி இருக்கை தோற்றுகையாலும், பராக்ரமித்தது பெரு
மாளுக்காக வென்கையாலே இதுவே ஸ்வாபாவிகமென்றும், திருவுள்ளம்
பற்றி யருளிச்செய்கிறார் (அக்காலத்திலித்யாதி). (இருக்கப் பணிபோ
ருகையாலே) என்றது- பின்வாங்குகையே கார்யமான படியாலே யென்ற

---

(௧) ரா-யு-௩௯-௧௧. (௨) ரா-ஸு-௨௯-௨௯. (௩) ரா-யு-௨௭-௧.

† இவ்விரண்டு பாதங்களும் ஓரிடத்ததல்லாமையாலே, இந்தவசவச
நம் தோஷமாகாது.

பண்ணுவாரைப்பெற்றதில்லை; பிராட்டி பிரிந்தபோதே "நம் குடியி நுப்புப்பெற்றோம்"என்கிற ப்ரீதியாலே ப்ரஹ்மாதிகள் அங்யபரரா னார்கள்; அக்காலத்தில் மங்களாசாஸநம் பண்ணப்பெறாத குறைதீர இன்று இருந்து மங்களாசாஸநம் பண்ணுவோம் சிலர்காண் நாங்களெ ன்கிறார். ... ... ... ... ... ... (ங)

அவ.—நாலாம்பாட்டு. (ஏடித்யாதி) கீழே - அநந்யப்ரயோஜ நரை யழைத்தார்; அவர்கள் மங்களாசாஸநத்துக்கு ப்ரத்யாஸந்நரா கையாலே, நீரிலே நீர்சேர்ந்தாற்போலே சேர்ந்திருக்குமிறே. அவ் வளவிலும் பர்யாப்தி பிறவாமையாலே, "ஈஶ்வரன் கைபார்த்திருக் குமவர்கள்" என்று மிவ்வளவைக்கொண்டு, ஆத்மப்ராப்திகாமரையும் ஐஶ்வர்யகாமரையும் அழைக்கக்கோலி, அதில் முந்துற ஆத்மப்ரா ப்திகாமரை யழைக்கிறார். ஐஶ்வர்யத்திற் காட்டில் ஆத்மப்ராப்தி உத்க்ருஷ்டமென்னும் நினைவாலே யழைக்கிறாரல்லர்; அந்த மோக்ஷ த்தை இவர் அநர்த்தமென்றிருக்கையாலே. இனி எத்தாலே முற் பட அழைக்கிறதென்னில்; பகவத்ஸம்பந்தத்துக்கு உபகரணமான

---

படி. ஆனால் ப்ரஹ்மாதிகள் இருந்தார்களே யென்ன, (க) "ராவணஸ்ய வதார்த்திபி:- ராவணஸ்ய வதார்த்திபி:" என்றதிலே நோக்காக அருளிச்செய்கி றார் (பிராட்டி யித்யாதி). (அங்யபரரானார்கள்) என்ற வநந்தரம், ஆகையா லே என்று கூட்டுவது. (சிலர்) என்கையாலே வைலக்ஷண்யம் ஸூசிதம்.

நாலாம்பாட்டு. (ஏடுநிலத்திலித்யாதி) வ்ருத்தாநுவாத பூர்வகமாக மேற்பாட்டுக்குங்கூட ஸங்கதியருளிச்செய்துகொண்டு, "கூடுமனமுடை யீர்" "பத்தருள்ளீர்" என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை (கீழ்) இத் யாதி, (இவரழைக்கிறது) என்னுமளவும். [சேர்ந்திருக்குமிறே, ஆகையா லே, கீழே அநந்யப்ரயோஜநரை யழைத்தார்] என்று கீழோடே ஸம்பந்தம். அநந்ய ப்ரயோஜநரோடே கூடி மங்களாசாஸநம் பண்ணுவதன்றோ வேண்டுவது, இவர்களை யழைப்பானேன், அழைக்க ப்ரஸக்திதானுண் டோவென்ன, (அவ்வளவிலு மித்யாதி). உத்கர்ஷத்தைப் பற்ற இவர்க ளை யழைக்கவொண்ணாதென்று நின்றுகொண்டு, முற்படுவானேனென்னென் கிறஶங்கையை அநுவதிக்கிறார் (ஐஶ்வர்யத்திலித்யாதி). ஐஶ்வர்யார்த்தி களைப்பற்ற அர்க்கதரென்று முற்பட அழைக்கிறாரென்கிறார் (பகவதித் யாதி). (உபகரணமான ஶரீரம்) என்றது - (உ) "விசித்ரா தேஹஸம்பத்தி:-

---

(க) ரா-அயோ-க-எ. (உ) விஷ்-தத்-

சரீரமோக்ஷம் அணித்தாகையாலும், அம்மோக்ஷத்தை ப்ராபித்தாற் மீளவொண்ணாமையாலும், ஐச்வர்யகாமனுக்குக் காலாந்தரத்திலே யாகிலும் பகவத்ஸம்பந்தம்பண்ண யோக்யதை யுண்டாகையாலும் இவனுக்கு அந்த யோக்யதையு மழிகையாலே துர்க்கதியைக்கண்டு முற்பட வழைக்கிறார். ப்ரயோஜநாந்தரபரர், "மங்களாசாஸநம்பண்ண வாருங்கோள்" என்றால் வருவர்களோ வென்னில்; பகவத்ப்ராப்தியினுத்கர்ஷத்தையும், அத்தைப்பற்ற கைவல்யத்தினுடைய நிகர்ஷத்தையு மறிவித்தால், "விட்டுப்பற்றவேணும்" என்னும் ஆத்மகுணோபேதரை யிறே இவரழைக்கிறது.

மூ.—ஏடுநிலத்திலிடுவதன் முன்னம் வந்தெங்கள் குழாம் புகுந்து
கூடுமனமுடையீர்கள் வரம்பொழி வந்தொல்லைக் கூடுமினோ
நாடு நகரமும் நன்கறிய நமோநாராயணாய வென்று
பாடுமனமுடைப் பத்தருள்ளீர் வந்துபல்லாண்டு கூறுமினே.

வ்யா. — (ஏடுநிலத்திலிடுவதன் முன்னம்) ஏடு என்பது - பொல்லாங்கு. "உங்களைப் பொல்லாநிலத்திலே யிடுவதற்குமுன்னம்" என்று பிள்ளையமுதனார். "ஏடு" என்கிறது - ஸூக்ஷ்மசரீரத்தை. ஸ்த்தூலசரீரத்திற்காட்டில் ப்ரதாநமாய் அதினுடைய ப்ரயோஜநரூபமாய் நிற்கையாலே, "பாலில்ஏடு" என்னுமாபோலே சொல்

---

விசித்ராதேஹ ஸம்பத்தி:" இத்யாதியைக் கடாக்ஷித்து. (அம்மோக்ஷத்தை) கைவல்யத்தை. இவ்வாக்யம், பகவல்லாபஹேதுவான சரீர பரிக்ரஹத்துக்கும் யோக்யதையில்லாதபடி கைவல்யம் நித்யமாயிருக்கையாலே வந்ததுர்க்கதியைச் சொல்லுகிறது. இத்தால் - மீளுகையும் வருகையும் போகையுமின்றிக்கே மின்மினிபோலேயிருந்து தன்னைத்தானே தின்று கிடக்குமென்றபடி. ஆக, இவர்களைத்தாமே யழைக்கைக்கு ப்ரஸக்தியருளிச்செய்தார் கீழ்; அவர்தாம் ஸ்வாபீஷ்டங்களை விட்டுவருவார்களோவென்று ஶங்கித்து, "மனமுடையீர்" என்றத்தைக் கடாக்ஷித்துப் பரிஹரிக்கிறார் (ப்ரயோஜநாந்தரேத்யாதி).

"ஏடு" என்றதுக்கு மூன்றர்த்தம், "நிலம்" என்றதுக்கு இரண்டர்த்தம்; இவற்றைக்காட்டுகிறார் (ஏடென்பது) என்றுதொடங்கி, (என்னவுமாம்) என்னுமளவும். (பொல்லாநிலம்) என்றது - ஶ்மசாநபூமி. ஸூக்ஷ்மசரீரத்தைக்காட்டும் ப்ரகாரத்தை யருளிச்செய்கிறார் (ஸ்த்தூலேத்யாதி). (ப்ரதாநமாய்) ஆமோக்ஷ ப்ரளய மநுவர்த்தமாநமாகையாலே அதிஶயிதையாய். (ப்ரயோஜநரூபமாய்) என்றது-ப(ஃ)லரூபமாயென்றபடி. அகா

லுகிறது. (நிலத்திலிடுவதன்முன்னம்) ஸ்வகாரணமான மூலப்ர க்ருதியிலே லயிப்பதற்குமுன்னே. இது நிர்வஹித்துப்போரும்படி;— "ஏடு" என்று - உடம்புக்குப்பேராய், ஸ்த்தூல ஸூக்ஷ்மரூபமான சரீரம், ஸ்வகாரணமான மூலப்ரக்ருதியிலே லயிப்பதற்குமுன் என்னவுமாம். இவ்வாக்யந்தான் - அவர்களுடைய அநர்த்தத்தைக் கண்டழைக்கிறுரென்னுமிடந் தோற்றவிருக்கிறதிறே. (வந்து) ஸ்வ தந்த்ரரா யிருப்பார்க்குத் தம்மளவில் வருமிடத்திலுண்டான தூரத் தைச்சொல்லுகிறது. (எங்கள் குழாம்புகுந்து) கேவலரும் ஒரு ஸமஷ்டியாயிறே யிருப்பது; அது ஸ்வதந்த்ர மாகையாலே அந்யோ ந்யம் சேர்த்தியற்றிருக்கும். ஒருத்தருடையஸம்ருத்தி ஒருத்தரதா யிறே இத்திரளிருப்பது. (க) "పరస్పర నీచభావైః-பரஸ்பரநீசபாவை꞉" என்னக்கடவதிறே.

---

வது - பூர்வபூர்வ கல்ப ஸ்த்தூலஶரீரம் கர்மத்வாரா உத்தரோத்தரகல்ப ஸூக்ஷ்மஶரீரத்துக்கு ஹேதுவாகையாலே யென்கை. "வந்து எங்கள் குழாம்புகுந்து" என்னு மிவ்வளவே யமைந்திருக்க, இப்படி இவ்வாக்யம் ப்ரயோகிப்பானென்னென்ன, அருளிச்செய்கிறுர் (இவ்வாக்யமித்யாதி). (தோற்ற) என்றது - தோற்றுவிக்க என்றபடி. "மனமுடையீர்கள்" என்று ஸம்போதிக்கச்செய்தே, "வந்து" என்னக்கூடாதே யென்ன, (ஸ்வதந் த்ரரித்யாதி). (ஸ்வதந்த்ரர்) கேவலர். இவர்க்கும், அத்யந்தபாரதந்த்ர்ய ஸ்வரூபாநுரூபமான மங்களாசாஸந பரர்க்குமுண்டான மாநஸஜ்ஞாந வைஷம்ய ப்ரயுக்தமான தூரத்தைச் சொல்லுகிறதென்று இவ்வாக்யத்து க்குத் தாத்பர்யம். "எங்கள்குழாம்" என்பானென், அவர்களும் குழாங் களாக இரார்களோ, அதுக்கும் இதுக்கும் வாசியேதென்ன வருளிச் செய்கிறுர் (கேவலரு மித்யாதி). (சேராச்சேர்த்தி) என்றது - ஸ்வார்த்த பரராகையாலே பரோத்கர்ஷாஸஹிஷ்ணுக்களாயிருக்கை. (உ) "సర్వ స్స్వార్థం సమీహతే - ஸர்வஸ்ஸ்வார்த்தம் ஸமீஹதே" அன்றே, இவர்க ளிப்படி யிரார்களோ வென்ன, (ஒருத்தரித்யாதி). பரஸம்ருத்தியே ப்ர யோஜநமாகையாலே அந்த விரோதமில்லையென்று கருத்து. இப்படி யிருப்பார்க ளென்னுமதுக்கு ப்ரமாணம் (பரஸ்பரேத்யாதி). "నిత్యాభివాఞ్ఛిత పరస్పరనీచభావైర్మద్దైవతైః పరిజనైస్తవ సఙ్గసీయ - நித்யாபிவாஞ்சித பர ஸ்பர நீசபாவைர்மத்தைவதை꞉ பரிஜநை ஸ்தவஸங்கஸீய" இது ஸ்ரீவை குண்ட ஸ்தவஶ்லோகம்.

---

(க) வை-ஸ்த-எ௫ (உ) பார-உ-௬௫.

இத்திரளில்புகுவார்க்கு எவ்வளவதிகாரம் வேணுமென்னில் (கூடு மனமுடையீர்கள்) "புகுருவோம்" என்னும் நினைவே வேண்டுவது. அவிலக்ஷணங்களான புருஷார்த்தங்களுக்கு புரஸ்சரணங்கள் கனக்க வேண்டியிருக்க, அதில் விலக்ஷணமான இத்திரளிலே புகுருகைக்கு புரஸ்சரணம் வேண்டாதிருப்ப தென்னென்னில்; அவை அப்ராப்த புருஷார்த்தங்களாகையாலே புரஸ்சரணாதிகள் அபேக்ஷிதங்களாயிருக்கிறன; இது ஸ்வரூப ப்ராப்தமாகையாலே வேண்டா. மாதாபிதாக்களை அநுவர்த்திக்கைக்கு இச்சையேயிறே வேண்டுவது. (உடையீர்கள்) இந்த இச்சையால்வந்த ப்ரயோஜநாதிசயத்தாலே "வைஸ்ரவணன்" என்னுமாபோலே யருளிச்செய்கிறார். கூட நினைப்பார்க்குச் செய்யவேண்டுவது, முன்புநின்ற சிறுமையைக் குலைத்துவரவேணும். (வரம்பொழிவந்து) "வரம்பொழிய" என்கிறவிது, "வரம்பொழி" என்று கிடக்கிறது. ஸர்வேஸ்வரனுக்கு ப்ரகாரபூதனாய், அவனுடைய ஸ்வரூப ரூப குண விபூதிகளை அநுபவிக்க இட்டுப்பிறந்தவன், (க) "ஜராமரணமோக்ஷாய - ஜராமரணமோக்ஷாய" என்று ஸ்வாநுபவத்தளவிலே ஒருவரம்பை யிட்டுக்கொண்டானிறே; அத்தையொழிந்து வாருங்கோளென்கிறார். (ஒல்லைக்கூடுமினோ) பற்றுகிற புருஷார்த்தத்தி

---

மேலுக்கவதாரிகை (இத்திரளிலித்யாதி). "மனமுடையீர்கள்" என்று இவ்வளவைச் சொல்லுகையாலே, வேறொன்று வேண்டாவென்று தோன்றுகிறது, அத்தைப்பற்ற அருளிச்செய்கிறார் (புகுருவோமித்யாதி). இப்படி ஸாதாரணமாகச் சொல்லுவா னென்னென்கிற தடஸ்த்தசங்கையை ஸோபபத்திகமாக சங்கித்துப் பரிஹரிக்கிறார் (அவிலக்ஷணேத்யாதி). (புரஸ்சரணம்) உபாஸநா பூர்வாங்கமான தீர்த்தயாத்ராதி கர்மங்கள். ஸ்வரூபப்ராப்தமாகையாலே வேண்டாவென்றதுக்கு த்ருஷ்டாந்தம் (மாதாபித்ரேத்யாதி). "உடையீர்கள்" என்கிற மதுப்பு பூ(பூமா)மாவிலேயாக்கி யருளிச்செய்கிறார் (இந்தஇச்சை யித்யாதி). (வைஸ்ரவணன் என்னுமாபோலே)என்றது-தநவான் என்னுமாபோலே யென்றபடி. கீழ்ப்பதத்தோடே "வரம்பொழி" என்றதுக்கு அவதாரிகை (கூட நினைப்பார்க்கு இத்யாதி). வரம்பாவது இன்னதென்கிறார் (ஸர்வேஸ்வரனுக்கித்யாதி). (இட்டுக்கொண்டானிறே) என்கையாலே - ஸ்வபுத்தி கல்பிதமானது ஸ்வரூப மன்றென்று தோற்றுகிறது. "ஒல்லை" என்றதுக்கு வாஸநை (பற்றுகிற இத்யாதி). பற்றுகிற புருஷார்த்தமாவது - திருப்பல்லாண்டு பாடுகை.

---

(க) கீ-எ-உக.

னுடைய வைலக்ஷண்யத்தை யநுஸந்தித்தால் பதறிக்கொண்டுவந்து விழவேண்டாவோ? "ஏடுநிலத்தி லிடுவதன்முன்னம்" என்றது - சரீரத்தில் அஸ்த்தைர்யத்தைப்பற்ற; இங்கு "ஒல்லை" என்கிறது- பற்றுகிற விஷயத்தினுடைய வைலக்ஷண்யத்தைப்பற்ற. "கூடுமனமுடையீர்கள்" என்றும், "கூடுமினோ" என்றும் அருளிச்செய்கிறதிறே யோக்யதையைப்பற்ற. "அத்திரளில் நின்றும் பிறிகதிர்ப்பட்டார் சிலரிவர்கள்"என்று தோற்றுமிறே, ஸ்வரூபம் வெளிச்செறித்தக்கால்.

(நாடுநகரமும் நன்கறிய) இத்திரளிலே புகுருகைக்கு வேண்டுவன வருளிச்செய்தார்; இதுக்குமேல் மங்களாசாஸநத்துக்கு வேண்டுவன வருளிச்செய்கிறார். "நாடு" என்று- அவிசேஷஜ்ஞரைச் சொல்லுகிறது; "நகரம்" என்று - விசேஷஜ்ஞரைச் சொல்லுகிறது. ராஜாவுக்கு ப்ரத்யாஸந்நரிறே நகரஸ்த்தர்; நாட்டார் தூரஸ்த்தரிறே; ஆகையாலே யருளிச்செய்கிறார். (நன்கறிய) நன்றாகவறிய. பகவத்ப்ரத்பாஸத்தியாலே அவிசேஷஜ்ஞர் விடும்படியாகவும், அதுதானே ஹேதுவாக விசேஷஜ்ஞர் பரிக்ரஹிக்கும்படியாகவும். (நன்கறிய) இந்நன்

---

"இடுவதன் முன்னம்" என்றபோதே சைக்ர்யம் தோன்றுகிற்க, "ஒல்லை" என்பானென்னென்ன, விஷயபேதத்தாலே பரிஹரிக்கிறார் (ஏடுநிலத்திலித்யாதி). (ஶரீரத்தில் அஸ்த்தைர்யத்தை)என்றது-பிள்ளை யமுதனார் நிர்வாஹத்தைப்பற்ற. வாருங்கோள் என்னாமல், பிரிந்துபோனாரை அழைக்குமாபோலே "கூடுமின்" என்பானென்னென்ன, அருளிச்செய்கிறார் (கூடுமனமித்யாதி). (யோக்யதை) சேஷத்வரூப ஸம்பந்தம். என்னென்றாலும், ஸம்பந்தஜ்ஞாநமுண்டானால் பிரிந்தாராகத் தோற்றுமோவென்ன, (அத்திரளித்யாதி). (பிறிகதிர் படுகை) கதிர்பிறிபடுகை. (வெளிச்செறித்தக்கால்) ப்ரகாசித்தால்.

வ்ருத்தாநுவாதம் பண்ணிக்கொண்டு உத்தரார்த்தத்துக்கெல்லாம் அவதாரிகை (இத்திரளித்யாதி). "விஶேஷஜ்ஞரையும் அவிஶேஷஜ்ஞரையும் சொல்லுகிறது" என்கைக்கு நியாமகம் (ராஜாவுக்கித்யாதி). (ஆகையாலே) என்றது - விஶேஷஜ்ஞாவிஶேஷஜ்ஞ லக்ஷணமாகையாலே யென்றபடி. (ஆகையாலே) என்ற வநந்தரம் நாடுநகரமும் என்று என்று சேஷம். இவர்களறிய வென்னாமல் "நன்கு" என்று விசேஷிக்கையாலே, நன்மையை விஶதீகரிக்கிறார் (பகவதித்யாதி). இவ்வாக்யாந்தத்தில் அறிய என்று அநுஷங்கித்துக்கொள்வது. "நன்கு" என்றதுக்கு அர்த்

மையை யறியவென்னுமாம். (நமோநாராயணுயவென்று) இவ்வள வும்போராது, தன்ஸ்வரூபத்தை உள்ளபடியறிந்து "ஸ்வரூபாநுரூப மான கைங்கர்யத்தைப்பெறவேணும்" என்று, - வைஷ்ணவனுய் வரவேணுமென்று. (க) "अहमपि ममम भगवत एवाहमस्मि - அஹ மபி நமம பகவதஏவாஹமஸ்மி" என்றிறே நமஶ்ஶப்தத்துக்கு அர்த்தமிருப்பது. ஸ்வாமி பக்கல்பண்ணும் அநுகூலவ்ருத்தியே யிறே புருஷார்த்தமாவது. (பாடுமனமுடைப்பத் தருள்ளீர்) நினைத் திருக்குமவ்வளவு போராது. ப்ரீதிக்குப் போக்குவிட்டுப் பாடுவோ மென்னும் நெஞ்சுண்டாம்படியான ப்ரேமத்தை யுடையீராகில். (வந்து பல்லாண்டுகூறுமினே) வந்து, திருப்பல்லாண்டு பாடுங்கோள். இத்திரளிலே புகுரவேணுமென்றிருப்பீர்! அத்தைச்செய்யுங்கோள்; அவ்வளவு போராது, உங்களுடைய வ்ருத்திவிசேஷமும் பெறவே ணு மென்றிருப்பீர்! திருப்பல்லாண்டு பாடுங்கோளென்று க்ரியை யை இரண்டாக்கி நிர்வஹிக்கவுமாம். ... ... ... (ச)

அவ.—அஞ்சாம்பாட்டு. (அண்டமித்யாதி) முற்பட அநந்ய

தாந்தரம் (இந்நன்மை இத்யாதி). (இவ்வளவு) என்றது - நாடும் நகர மும் நன்கறிகை. நமஶ்ஶப்தத்திலே நோக்காக (தன் ஸ்வரூபத்தை உள் ளபடி யறிந்து) என்றது. சதுர்த்தியைப்பற்ற (ஸ்வரூபேத்யாதி). இவ் வாக்யத்தால் பலிதம் (வைஷ்ணவனுய் வரவேணும்) என்றது. நமஶ்ஶப் தம் ஸ்வரூபயாதா(த்ம்ய)த்ம்ய ப்ரதிபாதக மென்றதுக்கு நியாமகமும் கைங்கர்யம் புருஷார்த்தமென்கைக்கு உபபத்தியுங் காட்டுகிறுர் (அஹமபி இத்யாதி வாக்யத்வயத்தாலே). "மனமுடையீர்கள் பத்தருள்ளீர்" என்று கூட்டித் தாத்பர்யம் (நினைத்திருக்கு மித்யாதி). "பாடுமனமுடை" என்ற துக்கு வ்யாவ்ருத்திபூர்வகமாக அர்த்தம் (நினைத்தித்யாதி)."பத்தருள்ளீர்" என்றத்தை யத்ய(ந்ஸ)ர்த்த விவக்ஷையாலே ஏகவிஷயமாக்கிக் கீழருளிச் செய்து, ஸம்போதநவிவக்ஷையாலே பி(ன்)ந்ந புருஷவிஷயமாக யோஜநாந் தரம் (இத்திரளிலே இத்யாதி). (அவ்வளவு) கூடுகைமாத்ரம். (க்ரியை யை இரண்டாக்கி) என்றது-இரண்டு க்ரியையை இரண்டு அதிகாரி விஷ யமாக்கி யென்றபடி. ... ... ... ... ... ... (ச)

அஞ்சாம்பாட்டு. (அண்டமித்யாதி) கீழ் இரண்டுபாட்டில் ப்ரமே யுங்களை யருளிச்செய்துகொண்டு, இப்பாட்டுக்கு ஸங்கதி யருளிச்செய் கிறுர் (முற்பட இத்யாதி).

(க) யஜு

ப்ரயோஜநரை யழைத்தார்; கேவலரும் ஐஶ்வர்யார்த்திகளும் ப்ரயோஜநாந்தரபரரா யிருக்கச்செய்தேயும், கேவலருடைய துர்க்கதியைக் கண்டு முந்துறவழைத்தார்; இப்பாட்டிலே- ஐஶ்வர்யார்த்திகளை யழைக்கிறார்.

மூ.—அண்டக்குலத்துக் கதிபதியாகி யசுரரிராக்கதரை
இண்டக்குலத்தை யெடுத்துக்களைந்த விருடீகேசன் றனக்குத்
தொண்டக்குலத்திலுள்ளீர் வந்தடிதொழுதாயிர நாமம்சொல்லிப்
பண்டைக்குலத்தைத்தவிர்ந்துபல்லாண்டுபல்லாயிரத்தாண்டென்மினே

வ்யா:—(அண்டக்குலத்துக் கதிபதியாகி) தேவதைகளுடைய ஐஶ்வர்யத்துக்கெல்லாம் மேலான அண்டாதிபத்யமிறே ஐஶ்வர்யத்துக்கு மேலெல்லை, அந்த ப்ரஹ்மாதிகள் ஸர்வேஶ்வரனை ஆஶ்ரயிக்கும் ப்ரகாரம் சொல்லுகிறது. "𑌅𑌣𑍍𑌡𑌾𑌧𑌿𑌪𑌤𑌯𑍇 𑌨𑌮𑌃 - அண்டாதிபதயேநம:" என்றிறே இப்பதப்ராப்திக்கு ஸாதநமான மந்த்ரம். அந்த அண்டைஶ்வர்ய விஶிஷ்டனாகவிறே ஸர்வேஶ்வரனை அநுஸந்திப்பது. (க) "𑌵𑍍𑌯𑌾𑌹𑌰𑌨𑍍 𑌮𑌾𑌮𑌨𑍁𑌸𑍍𑌮𑌰𑌨𑍍 - வ்யாஹரந் மாமநுஸ்மரந்" என்கிறபடியே இம்மந்த்ரத்தைச் சொல்லவும், நெஞ்சாலே ஐஶ்வர்ய விஶிஷ்டனாக அநுஸந்திக்கவு மாயிறே ஆஶ்ரயணப்ரகார மிருப்பது.

---

த்ரிலோகாதிபதியென்னாதே இப்படி ப்ரயோகிப்பானென்னென்ன, (தேவதைகளுடைய இத்யாதி). (மேலான) உத்க்ருஷ்டமான. சதுர்த்த(ஶ)ச லோகாதிபதி யென்னாதே, "அண்டக்குலத்துக்கதிபதி" என்பானென்னென்ன, மந்த்ரலிங்கம் தோற்றுகைக்காக என்கிறார் (அந்த இத்யாதி). (அந்த ப்ரஹ்மா) என்றது - அண்டாதிபத்யத்தையுடைய ப்ரஹ்மாவென்றபடி. சொல்லுகிற ப்ரகாரந் தன்னைக் காட்டுவாராக அதி(ஷ்)ஷ்ட்டிகை(அண்டாதிபதயேநம:) என்கிற வாக்யத்வயமும். மந்த்ரத்தைச் சொன்னால் போராதோ, ஐஶ்வர்யவிஶிஷ்டனாகவும் அநுஸந்திக்கவேணுமோ, என்கிற சங்கையைப் பரிஹரிக்கிறார் (வ்யாஹரந் இத்யாதி). அன்றிக்கே, (உ) "𑌨𑌮𑌶𑍍𑌚𑌕𑍍𑌰𑍁𑌃 - நமஶ்சக்ரு:" என்று நமஸ்காரமன்றோ ஆஶ்ரயணமாவது, சொல்லுகையும் அநுஸந்திக்கையும் ஆஶ்ரயண மாமோவென்ன, (வ்யாஹரந் இத்யாதி). ப்ரணவவிஷயமாகச் சொன்ன இந்தப்ரமாணம் மந்த்ராந்தரங்களுக்கும் துல்யந்யாயேந வருமென்று திருவுள்ளம். ஆஶ்ரயணத்துக்கு வாசகபதமில்லையேயென்று சங்காநுவாதம் பண்ணிக்கொண்டு, வாசகமில்லாவிட்டாலும் ஸூசகமுண்டென்று, த்ருஷ்டாந்த பூர்வகமாகப்

---

(க) கீ-அ-௧௩. (உ) பாரதம்.

அண்டக்குலத்துக்கு அதிபதியான ப்ரகாரமேயன்றோ இஸ்ஸப்தத்திலுள்ளது, ஆஸ்ரயணப்ரகாரம் தோற்ற விருந்ததில்லையேயென்னில்; உதாரனாயிருப்பானொருவன் கையிலே எலுமிச்சம்பழ மிருந்தால் "இது இருந்த வழகென்!" என்று சொன்னவளவிலே, பாவஜ்ஞனாயிருக்குமவன் "கொள்ளலாகாதோ" என்று கருத்தறிந்து கொடுக்குமிறே; அப்படியே, அண்டாதிபத்யத்திலே அபேக்ஷையுண்டென்று தங்களபேக்ஷையை ஆவிஷ்கரிக்கிறார்கள். இத்தால் - ப்ரயோஜநாந்தரபரரைக் குறித்து (க) "உதாரா: - உதாரா:" என்னுமவனுடைய ஔதார்யம் ப்ரகாசிக்கிறது. (அண்டக்குலத்துக்கு)(உ) "அண்டாநாந்து ஸஹஸ்ராணாம் - அண்டாநாந்து ஸஹஸ்ராணாம்" என்று தொடங்கி, (உ) "கோடிகோடி ஶதாநிச - கோடிகோடி ஶதாநிச" என்று அஸங்க்யாதமான அண்டங்களுக்கு நிர்வாஹகனாகையாலே அபேக்ஷித்தாரபேக்ஷித்த அண்டங்களைக் கொடுக்கைக்கு உடைமையைச் சொல்லுகிறது. (அதிபதி) உபயவிபூதிக்கும் நிர்வாஹகனாகை. (ஆகி) ஆஸ்ரிதர் தன்னை அநுஸந்தித்தவளவிலே யாயிருக்கை. ஐஸ்வர்யார்த்தி, ஐஸ்

---

பரிஹரிக்கிறார் (அண்டக்குலத்துக்கித்யாதி வாக்யத்ரயத்தாலே). மந்த்ரத்தாலே ஆவிஷ்கரிக்கிறார்க ளாகையாலே அண்டக்குலத்துக் கதிபதியாகியென்று அநுவதித்து ஸூசிப்பிக்கிறாரென்று கருத்து. வாசகமான சப்தத்தைச் சொல்லாதே, கொடுக்கைக்குறுப்பாக அபேக்ஷா ஸூசக சப்தம்ப்ரயோகிக்கையாலே, ஒருவிஶேஷார்த்தம் பலித்ததென்கிறார் (இத்தால் இத்யாதி). குலபதப்ரயோகதாத்பர்யம் (அண்டாநாம் இத்யாதி). (உடைமை) தேய(தேய)வஸ்து. பதியென்னாதே, "அதிபதி" என்கையாலே, அதி(தி)க: பதி: என்று விவக்ஷித்து அருளிச்செய்கிறார் (உபயேத்யாதி). இவ்வாக்யம் உபாஸகாபிப்ராயமன்றிக்கே ஆழ்வாருக்குக் கருத்தாக வ்யாக்க்யாதா அருளிச்செய்கிறாரென்று கண்டுகொள்வது. சில ஸ்ரீகோஶங்களி லிந்த பாடமுண்டு, கோஶாந்தரங்களிலே "அதிபதியாகி" என்று எடுத்துக்கூட்டி, "உபயவிபூதிக்கு நாயகனாயிருக்க ஆஸ்ரிதன் தன்னை யநுஸந்தித்தவளவிலேயா யிருக்கை" என்று பாடமுண்டு. இந்த பாடத்தில், உபயவிபூதிக்கு நாயகத்வம் ஸஹஜமாயிருக்க, அண்டமாத்ராதிபதியானென்னக்கூடுமோவென்ன, அருளிச்செய்கிறார் (உபயேத்யாதி) என்று கண்டுகொள்வது. (அநுஸந்தித்தவளவிலே) நினைத்த ஆகாரமாத்ரத்திலே. விவரணம்

---

(க) கீ-எ-கஅ. (உ) வி-பு-உ-எ-உஎ.

வர்ய விசிஷ்டனாக அநுஸந்தித்தால் அவ்வளவாயிருக்கும்; கைவல்யார்த்தி, அஸ்ப்ருஷ்ட ஸம்ஸார கந்த(ந்த)னாக அநுஸந்தித்தால் அவ்வளவாயிருக்கும்.

(அசுரரிராக்கதரை) இப்பதத்துக்கு அஸுரர்களாலே வேதாபஹாராத்யாபத்துக்களில் களையறுத்துக் கொடுக்கையும் ரக்ஷகனுக்கு ப(்ர)ரமிறே. "ஆர்த்தன்" என்றும், "அர்த்தார்த்தி" என்றும் ஐஸ்வர்ய புருஷார்த்தம் இரண்டு முகமாயிறே யிருப்பது. அதில் அர்த்தார்த்தியைக் கீழேசொல்லி, இவ்வம்சத்தாலே ஆர்த்தனைச் சொல்லுகிறது. ஜந்மப்ரப்ருதி பராநர்த்தமே பண்ணிப்போருவது இரண்டு வர்க்கமிறே. ஸம்பந்த மொத்திருக்க நிரஸநத்திலே இழிகிறது, ஆஸ்ரிதவிரோதிகளென்றிறே. (இண்டக்குலத்தை) மிகவும் நெருங்கின திரளை.

(ஐஸ்வர்யேத்யாதி வாக்யத்வயம்). (கைவல்யார்த்தி) என்கிற வாக்யத்துக்கு, (க) "அறவனை யாழிப்படையந்தணனை" என்று சுத்திகுணயோகத்தைச் சொல்லுவார்களிறேயென்று கருத்து. (அவ்வளவாயிருக்கும்) என்றது - ரக்ஷ்யாபேக்ஷாநு குணமாகத் தன்னை அமைத்துவைக்குமென்கை.

ப்ரஹ்மா அண்டாதிபத்யத்துக்காக ஆஸ்ரயிக்கிற ப்ரகாரம் சொல்லுகிற விடத்தில் அஸுரநிரஸநம் சொல்லுவானென்னென்னில், அருளிச்செய்கிறார் (இப்பதத்துக்கித்யாதி). (இப்பதத்துக்கு) என்றது - இந்த அண்டாதி(ர)பத்யத்துக்கென்றபடி. ரக்ஷகனுக்கு ப(்ர)ரமானாலும், பூர்வம் ஐஸ்வர்யார்த்தியை யழைக்கிற ப்ரகரணத்துக்கு அது சேருமோவென்ன, (ஆர்த்தனித்யாதி). இந்த ப்ரஹ்மாவுக்கே ஆபத்துவந்தால் ஆர்த்தியுமுண்டென்று கருத்து. அன்றிக்கே, அநிஷ்டநிவ்ருத்தி பூர்வகேஷ்டப்ராபணங்கள் ரக்ஷகக்ருத்யமாகையாலே, இஷ்டப்ராபணத்தில் அநிஷ்டநிவ்ருத்தி ஆநுஷங்கிகமாக வந்ததென்று கீழருளிச்செய்தது, ஐஸ்வர்யார்த்திதான் த்விவித(்த)னாகையாலே, "அசுரரிராக்கதர்" என்றதுக்கு யோஜநாந்தரமருளிச்செய்கிறார் (ஆர்த்தனித்யாதி) என்னவுமாம். இந்தயோஜனை ஸ்வரஸம். அசுரரென்றால் போராதோ, "இராக்கதர்" என்று சொல்லவேணுமோவென்ன, (ஜந்மேத்யாதி). (உ) "ஸமோऽஹம் ஸர்வபூதேஷு-ஸமோऽஹம் ஸர்வபூதேஷு" என்றிருக்குமவன் இவர்களை அழியச்செய்கைக்கு நியாமக மருளிச்செய்கிறார் (ஸம்பந்தமித்யாதி) "இண்டம்" என்றதுக்கு நெருக்கமாதல், சண்டாளரென்றுதல் இரண்டர்த்தம். சண்டாளரென்கிறது எவ்

(க) தி-வாய்-க-எ-க. (உ) கீதை-கூ-உக.

ஷ்டம் புஞ்ஜீத" என்று விதிப்ரேரிதராய்க் கொண்டு ப்ரதிபத்தி பண்ணுவர்கள் ஸ்வரூபஜ்ஞாநமில்லாதார்; ஸ்வரூபஜ்ஞாநமுடையார், தத்விதத்யர்த்தமாக ப்ரதிபத்தி பண்ணுவர்கள்; பகவத்ப்ரேமயுக்தர், ஸ்வயம்ப்ரயோஜநமென்றிருப்பர்கள். இச்சேஷத்வ காஷ்ட்டையான ததீயருடைய ப்ரஸாதம் (க) "தருவரேல்" என்கிறபடியே அதி(டு)க்ருதாதி(டு)காரமாயிருக்கும், ஸர்வ ஸாதாரணனாகையாலே, ப்ரயோஜநாந்தரபரனுக்கும் யோக்யமாயிறே பகவத்ப்ரஸாத மிருப்பது.

(தொடுத்தவித்யாதி) திருத்துழாய் பறிக்கும்போதும் தொடுக்கும்போதும் "அவன் சாத்தியருளப் புகுகிறான்" என்னும் ஆதரத்தாலே ஸம்ஸ்க்ருதமாய், சாத்திக்கழித்தால் சூடுமது எங்களுக்கு உத்தேஶ்யம். சுவடர் பூச்சூடும்போது பூவிலே தோய்த்துச் சூடுமாபோலே, தத்ஸ்பர்ஶத்தாலே விலக்ஷணமாயிருக்குமென்கை. அவன்றனும், சிலர்* சூடிக்கொடுத்த மாலையின் சுவடறியுமவனாகையாலே

தாலே). "புஞ்ஜீத" என்று சொன்னாற்போலே என்று சேஷம். (தத்விதத்யர்த்தமாக) என்றது - ஸ்வரூபவித்த்யர்த்தமாக என்றபடி. பகவச்சேஷத்வந்தான் பாகவத சேஷத்வபர்யந்தமல்லது கில்லாமையாலே, இந்த ப்ரஸாத ப்ரதிபத்திதான் காஷ்ட்டாபர்யந்தம் நடவாதொழியில் வித்தியாமையாலே, அவ்வளவும் நடக்கவேணுமே யென்ன, (இச் சேஷத்வேத்யாதி). (காஷ்ட்டையான) என்றது-ததீயப்ரஸாதம் சேஷத்வகாஷ்ட்டாஸம்பாதகமாகையாலே, அதிக்ருதாதிகாரம்; ஆகையால் இங்கும் அநந்யப்ரயோஜநரைச் சொல்லுமிடத்தில், ததீயபுக்தசேஷபர்யந்தமென்று கருத்து. பகவத் ப்ரஸாதமோவென்ன (ஸர்வேத்யாதி). (ப்ரயோஜநாந்தரபரர்க்கும்) என்ற ஸமுச்சயத்தாலே, அநந்ய ப்ரயோஜநர்களுக்குக் கேட்கவேணுமோவென்று தோற்றுகிறது.

சூடுகிறபோதே தொடுத்திருக்குமே, "தொடுத்த" என்று சொல்லுவானென்னென்ன, ஆதரம் தோற்றுகைக்காக வென்கிறார் (திருத்துழாய் இத்யாதி). ஸம்ஸ்க்ருதமாயிருக்கிற திருமாலையை யென்று சேஷம். அதுவே உத்தேஶ்யமாயிருக்கிறதோவென்ன, (சுவடரித்யாதி). சுவடர் - ரஸிகர், அவன்றான் பரமரஸிகனாயிருக்க, இவர்களைப்போலே †சூடினதைச் சூட்டாதே, தான் சூடிக்கொடுப்பானென்னென்ன, அச்சுவட்டையறிகையாலேதான் இவர்களிடத்தில் ப்ரீதியாலே சூடிக்கொடுக்கிறானென்கிறார், (அவன்றானு மித்யாதி). இத்தால் ஸ்ரீகோதாதேவி அவனுக்காக

(க) தி-மா-சக. † "சூட்டினதைச் சூடாதே" என்றிருக்கலாம்.

சூடிக்கொடுக்கிறானிறே. (இத்தொண்டர்களோம்) இப்படிப்பட்ட அடியார்களிறே நாங்கள். எமக்கென்று உடுத்தல் ஜீவித்தல் சூடுதல் செய்யுமவர்களன்றிக்கே, அவன் கழித்தவைகொண்டு தேஹயாத்ரை யாம்படி இருக்குமவர்களிறே நாங்கள்.

ஸ்வரூபவிருத்தமாக அத்தலையில் உச்சிஷ்டங்களை ஆகாங்க்ஷித்து, "புகையிலுண்பன்" என்றிருக்குமத்தனையோ வென்னில்;(விடுத்த வித்யாதி) ஸ்வாமிஸந்தேசகாரிகளாய்க்கொண்டு, இப்படி தேஹயாத்ரை நடத்துமவர்களிறே நாங்கள். (விடுத்ததிசைக் கருமம்திருத்தி) (௧) "క్రియతామ్ - க்ரியதாம்" என்கிற ஸந்தேசமே தா(ధా)ரகமாக ஏவின கார்யத்தைச் செய்து தலைக்கட்டுகை. திசைக்கருமம் திருத்துகையாவது - அத்திக்குக்கு வேறொருவரை ஏவவேண்டாதபடி செய்து தலைக்கட்டுகை. ஸ்வாமி ஏவினகார்யத்தைக் குறையச் செய்யுமவன் அதமன்; அத்தைக் குறையாமல் தலைக்கட்டுமவன் மத்யமன்; அதுக்குமேலே, அதுக்கு அவிருத்தமான கார்யங்களையும் விசாரித்துச் செய்து தலைக்கட்டுமவன் உத்தமன். (௨) "కార్యే కర్మణి నిర్దిష్టే యోబహూన్యపి సాధయేత్ । పూర్వకార్యావిరోధేన సకార్యం కర్తుమర్హతి -

---

அவன் நெஞ்சறிந்து தான் சூடிக்கொடுத்தாற்போலே, அவனும் இவர்கள் நெஞ்சறிந்து தான் சூடிக்கொடுக்கிறானென்றதாயிற்று. கீழ்வாக்ய விவரணம், (எமக்கென்று உடுத்தலித்யாதி).

மேற்பதத்துக்கவதாரிகை, (ஸ்வரூபேத்யாதி). விடுத்ததிசைக்கருமம் திருத்தாதபோது, கீழ்ச்சொன்னவை யெல்லாம் ப்ரேமகார்யமாகத் தோற்றுமையாலே, தததுகுணமாக இப்படி ஸங்கையுதிக்குமென்று திருவுள்ளம். (புகையில்) என்றது- பொகடில் என்றாய், ப்ரஸாதிக்கில் என்றபடி. அன்றிக்கே, புகையில் என்றது - புகையெழும்பில், அதைக்கண்டு ஊணத்யாயம்படிக்கை யென்றுமாம். இதெல்லாம் கடாக்ஷித்துத் தாத்பர்யம் (ஸ்வாமி இத்யாதி). ப்ரமாணபூர்வகமாக ஸப்தார்த்தம் (க்ரியதாமித்யாதி). "கருமந்திருத்தி" என்றால்போராதோ, "திசை" என்பானென்னென்ன, (அத்திக்கித்யாதி). "விடுத்ததிசை" என்று, திக்ப்ரதர்ஸநம்பண்ணின மாத்ரத்தில், கார்யங்களெல்லாம் அஸஹாயமாகத் தலைக்கட்டக்கூடுமோ வென்ன, அப்படிசெய்தவன் திருவடியன்றோ என்பாராக, இங்கர தாரதம்யத்தை அருளிச்செய்கிறார், (ஸ்வாமிஏவின இத்யாதி). அப்படி உத்தமாதிகாரி ஆரென்ன, (கார்யேத்யாதி). (கார்யேகர்மணி) என்றது - அவ

---

(௧) ரா-ஆர-௧௫-எ. (௨) ரா-ஸு-௪௧-௯.

கார்யேகர்மணி நிர்த்திஷ்டே யோபஹூந்யபி ஸாதயேத்! பூர்வகார்யா விரோதேந ஸகார்யம் கர்த்துமர்ஹதி" என்கிற திருவடியிறே அவனுகிறான். "பிராட்டி யிருந்தவிட மறிந்துவா" என்றுவிட, இருந்தவிடமு மறிந்து, "அவன்ப (ப) லமிருந்தபடியென்?" என்று பெருமாள் கேட்டருளினால், "அறிந்திலேன் என்னவொண்ணாது" என்று அத்தலையில் ப(ப)லபரீக்ஷையும்பண்ணி ஊரிலரணையும் தலையழித்து மூலையடியே போம்படி பண்ணிவந்தானிறே. (திருவோணத்திருவிழவில்) ஏவினகார்யத்தைக் குறையறச்செய்தவளவிலும் பர்யாப்தி பிறவாமையாலே, திருவவதரித்தருளின திருவோணமாகிற மங்கள திவஸத்திலே என்னதீங்கு வருகிறதோவென்று மங்களாசாஸநம்பண்ணி வர்த்திக்குமவர்கள்.

(படுத்தவித்யாதி) அத்தாலும் பர்யாப்தி பிறவாமையாலே திருவநந்தாழ்வான்மேலே சாய்ந்தபோதை அழகுக்குக் கண்ணெச்சில் வாராமைக்கு மங்களாசாஸநம் பண்ணுகிறார்கள். படுக்கப்பட்டு ஸ்வஸம்ஸ்லேஷத்தாலே விகஸிதமாகாநின்றுள்ள ப(ஃ)ணத்தையுடையனாய், மென்மை குளிர்த்தி நாற்றம் என்கிறவற்றை ப்ரக்ருதியாகவுடைய திருவநந்தாழ்வானாகிற படுக்கையிலே கண்வளர்ந்தருளுகிறவழகுக்கு மங்களாசாஸநம் பண்ணுகிறோம். ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனையும் மயங்கப்பண்ணும் படுக்கை. அவன் ஸ்வஸ்பர்சத்தாலே விக்ருதனாகப்பண்ணும். இவனுடைய வடிவும் அவனுடைய வடிவும், (க) "கிட

ஸ்ய கர்த்தவ்யமான வ்யாபாரம். திருவடி பஹூகார்யங்களைச் செய்தபடியை யருளிச்செய்கிறார், (பிராட்டி இத்யாதி) (அரணையும்) மதிளையும். (தலையழித்து) நன்றாக அழித்து என்றபடி. (மூலையடியேபோம்படி) சுட்டுப்போகட்டால் குட்டிச்சுவராமே, அப்போது மூலையாகப்போகலாமே, அத்தைப்பற்றச்சொல்லுகிறது. "திருவோணத்திருவிழவில் - பல்லாண்டு கூறுதும்" என்றுகூட்டி, கீழைக் கடாக்ஷித்துக்கொண்டு, அர்த்தமருளிச்செய்கிறார், (ஏவின இத்யாதி).

"படுத்த" இத்யாதிக்குத் தாத்பர்யம், (அத்தாலுமித்யாதி). (கண்ணெச்சில்) த்ருஷ்டிதோஷம். தாத்பர்யார்த்தகதநமுகேந வாக்யார்த்தம் (படுக்கப்பட்டு இத்யாதி). அவன் ஸர்வஜ்ஞனாயிருக்க, திருவநந்தாழ்வான் தானும் பரிவனாயிருக்க அச்சேர்த்திக்குப் பரியவேண்டும்படி யென்னென்ன (ஸ்வதஃஇத்யாதி). (அவன்) ஈஸ்வரன். இச்சேர்த்திக்குக் கண்ணெச்சில்வருகைக்கு ப்ரஸக்தியேதென்ன, (இவனுடைய இத்யாதி). கீழ்வாக்

(க) பெரு-திரு-எ-உ.

ந்ததோர்கிடக்கை" என்கிறபடியே பரிச்சேதிக்கவொண்ணாத வழகி றே-கண்வளர்ந்தருளுகிறபோதையழகு ஒருவெள்ளிமலையிலே காள மேகம் சாய்ந்தாற்போலே. கண்வளர்ந்தருளுகிறபோதை பரபாக (ஞா ℵ)‡(ரஸ)த்தை அநுஸந்தித்தால் மங்களாசாஸநமொழியச் செல் லுமோவென்கிறார்கள். ... ... ... ... ... (கூ)

அவ.— பத்தாம்பாட்டு. (எந்நாளித்யாதி) கீழிற் பாட்டில் புகு ந்த அநந்யப்ரயோஜநர், தேஹயாத்ரையிலும் தங்கள் பாரதந்த்ர்யமே ஸ்வரூபமாயிருக்கிற ஏற்றத்தைச் சொல்லிக்கொண்டு புகுந்தார்கள்; இதில், ப்ரயோஜநாந்தரபரர் புகுருகிறார்களாகையாலே, தங்கள்பக்கல் அங்ஙனிருப்பதோரேற்றங்காண விரகில்லாமையாலே,பகவத்ப்ரபாவ த்தால் தங்களுக்குப்பிறந்த ஏற்றத்தைச் சொல்லிக்கொண்டுவந்து புகுருகிறார்கள். ஐஶ்வர்யார்த்தியும் ஸங்கதனாகிறபோது (க) "சாந்த

---

யத்தை விவரித்துக்கொண்டு, "பல்லாண்டுகூறுதுமே" என்கிற நிர்த்தார ணத்தைக் காட்டுகிறார், (கண்வளர்ந்தருளுகிறபோதை இத்யாதி). சாய்ந் தாற்போலே யிருப்பதொன்றாகையாலே என்று கூட்டுவது. (பரபாகத் தை) வர்ணோத்கர்ஷத்தை. ... ... ... ... (கூ)

பத்தாம்பாட்டு (எந்நாளித்யாதி). கீழிற்பாட்டில் அநந்யப்ரயோஜநர்பா சுரமென்றீர், அதுக்கும், இப்பாட்டு ப்ரயோஜநாந்தரபரர் பாசுரமாகைக் கும் ஸூசகம், ஏதென்ன, அருளிச்செய்கிறார், (கீழிற்பாட்டிலித்யாதி வாக் யத்வயத்தாலே). தேஹயாத்ரையிலும் பாரதந்த்ர்யமே ஸ்வரூபமாகச்சொ ல்லுகையாலும், பகவத்ப்ரபாவத்தாலே தங்களுக்கு தாத்காலிகாதிஶயம் வந்ததாகச் சொல்லுகையாலும், ஸூசகங்களுண்டு; ஆகையாலே, அநந்ய ப்ரயோஜநர் பாசுரம் அது,இது ப்ரயோஜநாந்தரபரர் பாசுரம் என்று கரு த்து. (தேஹயாத்ரையிலும்)என்ற ஸமுச்சயம், ஆத்மயாத்ரையில் கிம்புநர்ந் யாயத்தை ஸூசிப்பிக்கிறது. மங்களாஶாஸநம் பண்ணப்புகுந்தார்களா கையாலே அவர்களோடு திருப்பல்லாண்டுபாடினார் என்றுகூட்டுவது. (ப்ர யோஜநாந்தரபரர்) என்றதுக்குக் கேவலரென்றுகருத்து. (அங்ஙனிருப் பது)என்றது-பரதந்த்ரனாயிருப்பதென்றபடி. (புகுருகிறார்கள்) மங்களா ஶாஸநம் பண்ணப்புகுருகிறார்கள்; அவர்கள் பாசுரத்தாலே திருப்பல்லா ண்டு பாடுகிறாரென்று இங்கு கூட்டுவது. ப்ரயோஜநாந்தர பரரானால், பக வத்ப்ரபாவத்தைச் சொல்லவேணுமோவென்ன, (ஐஶ்வர்யார்த்தியுமித்யா தி). ஐஶ்வர்யார்த்தியைப்போலே ஸங்கதராகிற "தீயிற்பொலிகின்ற"என்ற

---

(க) அ. ‡ குண்டலிதாக்ஷரங்கள் அரும்பதத்துக்கு பாடமில்லை.

மும் தந்தென்னை வெள்ளுயிராக்கவல்ல" என்று பகவத்ப்ரபாவத்தைச் சொல்லிக்கொண்டுவந்திறே புகுந்தது. அவன்றான் நானபேக்ஷித்த க்ஷுத்ர புருஷார்த்தத்தைத் தந்துவைத்து என்னை சுத்தஸ்வபாவனாக்கினனென்று ஆஶ்சர்யப்பட்டான்; கைவல்யார்த்திகள், தங்கள் க்ஷுத்ரபுருஷார்த்த ஸம்பந்தம் யாவதாத்மபாவி விநாசகரமாகையாலே ஆஶ்ரயணவேளையிலே மீட்ட ஆஶ்சர்யத்தைக் கொண்டாடுகிறார்கள்.

மூ.—

எந்நாளெம்பெருமானுன்றனக்கடியோமென்றெழுத்துப்பட்ட
அந்நாளே யடியோங்க ளடிக்குடில் வீடுபெற்றுய்ந்ததுகாண்
செந்நாள் தோற்றித் திருமதுரையுள் சிலை குனித் தைந்தலைய
பைந்நாகத்தலைப்பாய்ந்தவனே உன்னைப்பல்லாண்டு கூறுதுமே. (௧௦)

வ்யா.—(எந்நாள்) "அந்நாள்" என்னவமைந்திருக்க, "எந்நாள்" என்கிறது, வகுத்தசேஷிபக்கலிலே க்ஷுத்ரபுருஷார்த்தத்தை அபேக்ஷித்தகாலமாயிருக்கச்செய்தேயும், (௧) "ஸுப்ரபாதாச மே நிஶா-ஸுப்ரபாதாச மே நிஶா" என்கிறபடியே மங்களாசாஸநம் பண்ணுகைக்கு யோக்யமாம்படி புகுராநின்ற திவஸமென்று அந்நாளைக் கொண்டாடுகிறார்கள். பகவத்ப்ரபாவந்தான், விஷயீகரித்த திவஸத்தையும் கொ

திலே சொல்லாதே, இப்பாட்டிலே இத்தைச்சொல்லி ஆஶ்சர்யப்பட வேண்டுகிறபடி யென்னென்ன, அருளிச்செய்கிறார் (அவனித்யாதி வாக்ய த்வயத்தாலே). ஈஶ்வரன் தந்து வெள்ளுயிராக்கினானாகையாலே, அவனை முன்னிலையாகக்கண்ட வாஸநையாலே, அவன் வைலக்ஷண்யம் நெஞ்சில் பட்டு, அந்தப்பாட்டிலே கொண்டாடினார்கள் ஐஶ்வர்யார்த்திகள்; கேவலர் உபாஸநதசையில் அவனை முன்னிலையாகக் காணாமையாலே, ஆழ்வாராலே திருந்தி, அவனைக்கண்டு மங்களாஶாஸநம் பண்ணுகிற இந்தப்பாட்டில் கொண்டாடினார்கள் என்றுகருத்து. (கொண்டாடுகிறார்கள்) என்ற அநந்தரம் இப்பாட்டில் என்று கூட்டுவது.

மேலே "அந்நாள்" என்று சொல்லியிருக்க; அது அமையாதோ, "எந்நாள்" என்று சொல்லுவானென்னென்கிற ஶங்கையை அநுவதித்துப் பரிஹரிக்கிறார் (அந்நாளித்யாதி). எந்நாள் என்கிறதென்னென்னில் என்றுஶேஷம். கொண்டாடுகிறார்களாகையாலே, "எந்நாள்" என்கிறது என்றுகூட்டுவது. வேணுமாகில் பகவானைக்கொண்டாடுகிறார்கள், நாளைக்கொண்டாடுவானென்னென்ன, (பகவதித்யாதி). இப்படி நாளைக்கொண்டாடினதுண்டோவென்ன, ராமக்ருஷ்ணாதிரூபேண அவதரித்தகாலத்தில் அதிஶய

(௧) வி-பு-௫-௧௭-௩.

ண்டாடும்படியாயிருக்குமிறே. அவதாரத்திலேற்றம் சொல்லுகிற வளவில் தஜ்ஜந்மதிவஸமென்று அந்நாளும் கொண்டாடப்பட்டதிறே.

ப்ரயோஜநாந்தரத்தை அபேக்ஷித்து வந்தவன், அது ஒழிந்து அநந்யப்ரயோஜநனானைக்கு அடியென்னென்னில்; (எம்பெருமான்) க்ஷுத்ரப்ரயோஜநத்தை அபேக்ஷித்து நிருபாதிக சேஷியான உன் பக்கலிலே வருகையாலே ஸ்வரூப ப்ராப்தமாய் வந்த சேஷத்வமே பலித்துவிட்டது. வகுத்த சேஷியானாலும் அபேக்ஷிதங்களை யொழிய புருஷார்த்தாந்தரங்களைக் கொடுக்கும்போது, அர்த்தி பக்கலிலே ஒரு கைம்முதல் வேண்டாவோவென்னில், (உன்றனக்கடியோமென் றெழுத்துப்பட்ட) "அடியோம்" என்கிற அர்த்தத்துக்கு வாசகமான சப்தத்திலே எங்களுக்கு அந்வயமுண்டு; நெஞ்சிலின்றிக்கே யிருக்கி

---

த்தைச் சொல்லவந்து, அந்ததிவஸத்தை "ராமஜயந்தி" "க்ருஷ்ணஜயந்தி" "நரஸிம்ஹஜயந்தி" என்று ஶாஸ்த்ரங்களால் கொண்டாடப்பட்டதென்கிறார் (அவதாரத்திலித்யாதி).

"எம்பெருமான்" இத்யாதிக்கவதாரிகை (ப்ரயோஜநேத்யாதி). எம்பெருமானாகையாலே, உய்ந்ததுகாண் என்று திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறார் (க்ஷுத்ரேத்யாதி). "அடியோங்கள்" இத்யாதிக்கவதாரிகை (வகுத்தஇத்யாதி). (வகுத்த) ப்ராப்தமான. (எழுத்து) வர்ணாத்மகமான ஶப்தம்; அதாவது-ப்ரணவமாதல், நமஶ்ஶப்தமாதல். (எழுத்துப்படுகை) உச்சரிக்கை. முந்தின அர்த்தத்திலே நோக்காக அருளிச்செய்கிறார் (அடியோமென்கிற இத்யாதி). (வாசகமானஶப்தம்) என்றது-ப்ரணவம்; இது "அடியோம்" என்கிற அர்த்தத்தைச் சொல்லுகையாவது - "அடியோம்" என்கிறபதம் ப்ரதியோகிஸாபேக்ஷமாகையாலே அகாரார்த்தத்தையும், "ஸர்வம்வாக்யம் ஸாவதாரணம்" என்கிற ந்யாயத்தாலே உகாரார்த்தத்தையும், இதுக்கு ப்ரவ்ருத்திநிமித்தம் தாஸ்யமாகையாலே சதுர்த்த்யர்த்தத்தையும், அஸ்மச்சப்த பர்யாயதயா ப்ரத்ய கர்த்தபோதகமாகையாலே மகாரார்த்தத்தையும், இதில் பஹுவசநத்தாலே அதில் ஜாத்யபிப்ராயகத்வத்தையும் காட்டக்கடவதாயிருக்கை. வாசகமென்றது- ப்ரணவத்துக்கு ஜீவப்ராதாந்யம் சாப்தமாகையாலே. வேறொன்றை யபேக்ஷித்து, மற்றொன்றுக்கு வாசகஶப்தம் சொன்னால்போருமோவென்ன, "உன்றனக்கு" என்றதிலே நோக்காக அருளிச்செய்கிறார் (நெஞ்சிலித்யாதி). ஸைவல்

லும் வாயிலுண்டான மாத்ரங்கொண்டு தரவல்ல சக்தியுண்டிறே உன க்கு. அடிமைக்கு வாசகமான சப்தம் கைவல்யார்த்தியுடைய உபாஸநத்திலே யுண்டிறே. (௧) "ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்ம வ்யாஹரந் மாமநுஸ்மரந் - ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்ம வ்யாஹரந் மாமநுஸ்மரந்" என்னக்கடவதிறே. அதவா, ஆரேனும் பக்கலிலே ஏதேனுமொன்றை வேண்டிச் செல்லிலும் நமஸ்ஸப்தப்ரயோகம் பண்ணக்கடவதாயிறே யிருப்பது; அதுவும் ஆத்மயாதாத்ம்ய வாசகமிறே. அதுவே எங்கள் பக்கல் கைம்முதலென்கிறார்கள். "எம்பெருமான்" என்கிற ப்ராப்தியாலும், "உன்றனக்கு" என்கிற சக்தியாலும், "எழுத்துப்பட்ட" என்கிற சப்தமாத்ரத்தாலும் பலிக்கக்கண்டோ மென்கிறார்கள். "பட்ட" என்கிறது - "முத்துப்பட்ட" என்கிறாப்போலே. "வாழாட்பட்டு" என்கிறவிடத்திலே அர்த்தத்தினுடைய துர்லபத்வம் சொல்லிற்று; வாசக சப்தத்தினுடைய துர்லபத்வம் சொல்லுகிறது இங்கு. அஹங்கார க்ரஸ்தமான ஸம்ஸாரத்துக்குள்ளே தாஸ்ய ப்ரகாசம் அலப்ய லாப மானாற்போலே, பஹுஜல்பம்பண்ணிப் போருகிறவாய்லே

---

யார்த்திக்கு இந்த சப்தப்ரயோக ப்ரஸங்கமென்னென்ன, (அடிமைக்கித்யாதி). எங்ஙனேயென்ன, (ஓமித்யாதி). இந்த ப்ரமாணம் ஐஸ்வர்யார்த்தி விஷயமான அண்டக்குலத்திலும் எடுத்தருளினார், இங்குமெடுக்கையாலே உபாஸநமாத்ரத்துக்கெல்லாம் இதுவேணுமென்று திருவுள்ளம். இரண்டாம்அர்த்தத்தை யருளிச்செய்கிறார் (அதவா இத்யாதி). (நமஃப்ரயோகம்) என்றது - நமஸ்ஸப்த ப்ரயோகமென்றபடி. ஆனால் இது "அடியோம்" என்றதாமோவென்ன (அதுவுமித்யாதி). யாதாத்ம்யவாசகமாகையாலே தத்வாசகத்வம் ஸித்தமென்று கருத்து. இந்தஅர்த்தத்திலும் ப்ரக்ருத ஸங்கைக்கு உத்தரங்காட்டுகிறார், (அதுவே எங்களித்யாதி). கீழ்ச்சொன்ன அர்த்தத்தை நிகமிக்கிறார் (எம்பெருமானித்யாதி). "கூழாட்பட்டு" என்ற இடத்திற்போலே யாகாமைக்காக அருளிச்செய்கிறார் (பட்டவென்கிற இத்யாதி). வேணுமாகில், இதில் அர்த்தாநுஷ்டாநம் துர்லபமாகையாலே இப்படிசொல்லலாம், ஸுலபமாக ஸப்தத்தை ப்ரயோகிக்கை அருமையாமோவென்ன, அருளிச்செய்கிறா (வாழாளித்யாதி வாக்யத்வயத்தாலே). (அர்த்தம்) என்றது - தாஸ்யம். கீழ்ச்சொன்ன சப்ததௌர்லப்யத்தை ஸத்ருஷ்டாந்தமாக உபபாதிக்கிறார், (அஹங்காரேத்யாதி). "எந்

---

(௧) கீ-அ-௧௩.

நமஸ்ஸப்தமுண்டாகை அலப்ய லாபமிறே. (அந்நாள்) "எம்பெரு மான் உன்றனக்கடியோமென்று எழுத்துப்பட்டநாள், எந்நாள்-அந் நாள்" என்றந்வயம். "அந்நாளே" என்கிற அவதாரணத்தாலே - அது தொழிய எங்கள்பக்கல் ஆநுகூல்யலேசமுமில்லை யென்று கருத்து.

அத்தால்பெற்றதென்னென்ன; தாங்கள்பெற்ற ப்ரயோஜநபரம் பரைகளைச் சொல்லுகிறார்கள். (அடியோங்களித்யாதி) அடியோங்களா கப் பெற்றோம்; குடிலும் அடிக்குடிலாகப்பெற்றது; வீட்டை லபிக் கப்பெற்றோம்; உஜ்ஜீவிக்கப்பெற்றோம். (அடியோங்கள்) என்கிறார் கள் - அஹங்காரக்ரஸ்தராய் தததநுகூலமான க்ஷுத்ர புருஷார்த்தத் தை அபேக்ஷித்து உன் திருவடிகளிலே வந்து ஒதுங்கின நாங்கள், அதுபோய் தாஸ்யைகரஸராகப் பெற்றோம். (அடிக்குடில்) "குடில்" என்று க்ருஹம். அத்தாலே - க்ருஹஸ்த்தரான புத்ரபௌத்ராதிக ளும் அடியாராகப்பெற்றோம். (க) "நல்லபதத்தால் மனைவாழ்வர்" என்னக்கடவதிறே. எழுத்துப்பட்டது தங்களளவிலேயாகில் புத்ர பௌத்ராதிகளளவில் ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்தபடி யென்னென்னில்; முத்துப்பட்டதுறையைக் காவலிடுமவன் அசல்துறையையும் காவ

நாள்" என்றதுக்கு விசேஷ்யாகாங்க்ஷையில் "நாள்" என்கிறபதத்தை அத்யாஹரித்து; அந்வயங்காட்டுகிறார் (எம்பெருமானித்யாதி). (அதுவொ ழிய) - எம்பெருமானுக்கென்றெழுத்துப்பட்ட நாளொழிய.

மேலுக்கவதாரிகை (அத்தாலித்யாதி). அத்தாலென்றது - அந்நாளா லென்றபடி. பரம்பரைதன்னைக் காட்டுகிறார் (அடியோங்களாகஇத்யாதி). (குடிலும்) குடீரமும். (அடிக்குடிலாக) என்றது - அடிமையுடைத்தான குடிலென்றபடி. (அடியோங்கள்) என்றது - நாங்களென்றபடி. இந்நாலு ப்ரயோஜநங்களையும் அவர்களுடைய ஹார்த்தாபிப்ராயாநுகுணமாக விவ ரிக்கவேணுமென்று திருவுள்ளம்பற்றி, "அடியோங்களாகப் பெற்றோம்" என்றதுக்கு பூர்வதஶாகதநமுகேந விவரணம், (அஹங்காரேத்யாதி). (க்ரு ஹஸ்த்தரான) க்ருஹத்திலிருக்கிற. "குடில்" என்றத்தாலே தத்ரத்யரை லக்ஷணயா சொல்லுகிறதென்று திருவுள்ளம். இதுக்கு ப்ரமாணம் (நல்ல இத்யாதி). (நல்லபதம்) அநுகூலதாம்பத்யம். இந்த ப்ரமாணத்தில் "கொண்டபெண்டிர்மக்கள்" என்ற பர்யந்தம் திருவுள்ளம். எழுத்துப் பட்டவர்களுடைய ஸம்பந்தமே ஹேதுவாக ப்ரதிபந்தகத்தைப்போக்கி,

(க) தி-வாய்-அ-௧௦-௧௧.

வீடுமாபோலே, ஸம்பந்தி ஸம்பந்திகளளவும் அஹங்கார மமகாரங்கள் புகுராதபடி விஷயீகரித்தானென்கை. இவர்கள் ஸங்கதராகிற பாட்டிலும், (க) "குடிகுடியாட் செய்கின்றோம்" என்றார்களிறே. சேஷிஸந்நிதியிலே சேஷபூதர் க்ருஹத்தை "குடில்வளைக்க" என்று சொல்லக்கடவதிறே. (வீடுபெற்று) வீட்டைலபித்து. அதாகிறது-அஹங்கார மமகார கார்யமான ஐஸ்வர்யகைவல்யங்களாகிற த்யாஜ்யங்களை விடப்பெற்று. ப்ராப்யஸித்தியோபாதி த்யாகஸித்தியும் ப்ராப்பாந்தர்க்கதமிறே. (உய்ந்ததுகாண்) தாஸ்யம் என்றும் உஜ்ஜீவநம் என்றும் பர்யாயம்போலே காணும். "உய்ந்ததுகாண்" என்று- அறியாதாரை அறிவிப்பாரைப்போலே சொல்லுகிற இதுக்குக் கருத்தென்னென்னில்; உபகரித்து விஸ்மரித்துப்போவது நீ; நீ பண்ணின உபகாரம் நாங்களுபதேசிக்கக் கேளாயென்கிறார்கள்.

(செந்நாளித்யாதி) ப்ரயோஜநாந்தரங்களைக் கைவிட்டு அநந்யப்ரயோஜநரானிகோளாகில் இனி க்ருத்யமென்னென்னில்; உனக்கு மங்களாசாஸநம் பண்ணுகையே க்ருத்யமென்கிறார்கள்; விஷயமேதென்ன,

ஜ்ஞாநத்தை யுண்டாக்கினனென்று பரிஹரிக்கிறார் (மூத்துப்பட்ட இத்யாதி). "அடிக்குடில்" என்றதுக்குச் சொன்ன அர்த்தத்திலே ஸம்வாதங் காட்டுகிறார் (இவர்கள்ஸங்கதரித்யாதி). மனையென்னாதே *குடில் ஶப்தத்தாலே சொல்லுவானென்னென்ன, (ஶேஷிஇத்யாதி). (குடில்வளைக்க) என்றது, லோகவ்யவஹாரத்தைக் காட்டினபடி. வீடு-பரமபதமென்றால் மங்களாஶாஸநவேளையிலே சொல்லக்கூடாமையாலே, "வீடு" என்றத்தைவிடுகையாக விவரிக்கிறார், (அதாகிறதித்யாதி). இப்பாட்டு கேவலருடைய ப்ாசுரமாயிருக்க, ஐஶ்வர்யகைவல்யங்களென்று கூட்டியருளிச்செய்தது, அத்தைவிட்டுப்பின்பும் ப்ரக்ருதிஸம்பந்தத்தாலே இதுக்குவரு ப்ரஸக்தி யுண்டென்னுங்கருத்தாலே. அபிமதஸித்தியொழிய த்யாகஸித்தி பேறோவென்ன, (ப்ராப்யேத்யாதி). உஜ்ஜீவநமாவதேதென்ன, (தாஸ்யமென்றும் இத்யாதி). (பர்யாயம்) என்றது-விஶேஷ்யபர்யவஸாநவ்ருத்யா. ஸர்வஜ்ஞனுக்கு, "காண்" என்று, காட்டவேணுமோ என்கிறஶங்கையை அநுவதித்து, பரமோதாரனுகையாலே வேணுமென்று பரிஹரிக்கிறார், (உய்ந்ததித்யாதி).

உத்தரார்த்தத்துக் கெல்லாம் பாவம் (ப்ரயோஜநாந்தரேத்யாதி). "பாய்ந்தவனே" என்னுமளவுக்கும் அவதாரிகை (விஷயமேதென்ன) என்

(க) எ.

(செம்நாள்) அவதாரத்துக்கு ஏகாந்தமான நாளாகையாலே, அழகிய நாளென்கிறார்கள். (தோற்றி) அதீந்த்ரியமான விக்ரஹத்தை (க) “[illegible] - ஸகலமநுஜ நயநவிஷயதாங்கத:” என்கிறபடியே உகவாதார்கண்ணுக்கும் விஷயமாம்படி தோற்றுவித்து. (திருமதுரையுள்) அதுதானும் நிர்ப்பயமான அயோத்த்யையிலன்றிக்கே, சத்ருவான கம்ஸன் வர்த்திக்கிற ஊரிலே. (சிலைகுனித்து) அவ்வூரில் தங்கவொண்ணாமையாலே திருவாய்ப்பாடியிலேபோய் மறைய வளருகிற நீ, மறித்தும் அவ்வூரிலே புகுந்து கம்ஸனுடைய ஆயுதசாலையிலேபுக்கு வில்லை முறித்துப் பூசலைவிளைத்தாய். அநுகூலருடைய “என்வருகிறதோ” என்று வயிறுபிடிக்க வேண்டும்படியான தசையிலே கம்ஸனுக்கு மறம்பிறக்கும்படி சிலுகுபடுத்துவதே!.

(ஐந்தலையவித்யாதி) அதுகிடக்க,நிர்ப்பயமாய் வர்த்திக்கிற காலத்திலே பிறந்த ப்ரமாதமே போராதோ வயிறெரிகைக்கு என்கிறார்கள். (ஐந்தலைய பைந்நாகத்தலைப்பாய்ந்தவனே) கடிக்கைக்கு அஞ்சுவாயை

---

றது. நாளுக்குச்செவ்வையேதென்ன, (அவதாரத்துக்கித்யாதி). “தோற்றி” என்றதுக்கு வாஸநை (அதீந்த்ரியேத்யாதி). “மதுரை” என்றத்தைக் கடாக்ஷித்து (உகவாதார்கண்ணுக்கும்) என்றது. வ்யாவர்த்யகதந பூர்வகமாகத்தாத்பர்யம் (அதுதானுமித்யாதி). சிலை - வில். குனிக்கை - வளைக்கை;—அத்தாலே முறிக்கையைச் சொல்லுகிறதாய், கீழ்ப்பதத்தையும் சேர்த்துத் தாத்பர்யம் (அவ்வூரிலித்யாதி). (மறித்தும்) புநரபீத்யர்த்த:. (பூசல்விளைத்தாய்)என்றது-அர்த்தஸித்தம். (இவ்வபதாநத்தைச் சொன்னவர்களுடைய உட்கருத்தை யருளிச்செய்கிறார் (அநுகூலரித்யாதி). (வயிறு பிடிக்க வேண்டும்படியான தசை) என்றது, ஒளித்து வளருகையாலே. (மறம்) கோபம். (சிலுகு படுத்துகை) சண்டையுண்டாக்குகை.

திருமதுரை கம்ஸனதாகையாலே, அங்கே அவதரித்ததும் பூசலை விளைத்ததுந்தான் பயஹேதுவாயிற்று, பரிவாருள்ள திருவாய்ப்பாடியிலே தான் நிர்ப்பயமாக வளரப்பெற்றதோவென்று, “ஐந்தலைய” இத்யாதிக்குத்தாத்பர்ய மருளிச்செய்கிறார் (அது கிடக்கஇத்யாதி). இவ்வபதாநங்களை முன்பின்னாக அருளிச்செய்கையாலே, இவ்வர்த்தம் பலிதமென்று திருவுள்ளம். (நிர்ப்பயமாய்வர்த்திக்கிறகாலம்) என்றது- ஸ்ரீப்ருந்தாவநத்திலே திரிகிறகாலமென்றபடி. கம்ஸனில்லாத ஸ்த்தலமாகையாலே நிர்ப்பயமென்றது. காளியனை இங்கேவர்ணிக்கைக்குத் தாத்பர்யம். (கடிக்கைக்கித்

யுடைத்தாய், க்ரோதத்தாலே விஸ்த்ருதமான ப(ஷ்ஹ)ணத்தை யுடைத்தான ஸர்ப்பாஸ்யத்திலேயன்றோ புக்கது. (க) “𑌏𑌕𑌦𑌾 𑌤𑍁 𑌵𑌿𑌨𑌾 𑌰𑌾𑌮𑌂 𑌕𑍃𑌷𑍍𑌣𑍋 𑌬𑍃𑌨𑍍𑌦𑌾𑌵𑌨𑌂 𑌯𑌯𑍌 - ஏகதாது விநாராமம் க்ருஷ்ணோ ப்ருந்தாவநம் யயௌ” என்று - தமயன் ஒருநாள் பேரநிற்க பாம்பின்வாயிலே புகும்படியிறே தீம்பு. “க்ருஷ்ணாவதாரமென்றால், ஆழ்வார்களெல்லாரும் ஒக்கப்பரிவரா யிருப்பார்கள், இதுக்கடியென்?” என்று ஜீயர் பட்டரைக்கேட்க; “ராமாவதாரத்தில் பிள்ளைகள் தாங்கள் மிடுக்கராய், குணநிகருமாய், பிதா சம்பராந்தகனுமாய், மந்த்ரிகள் வஸிஷ்ட்டாதிகளுமாய், ஊர் அயோத்த்யையுமாய், காலம் நல்லகாலமுமாயிருக்கையாலே அங்குத்தைக்கு ஒரு பயமுமில்லை; இங்கு, வந்து பிறந்த இடம் சத்ருக்ருஹமாய், கம்ஸன் இடம்பார்த்துநலியும் துஷ்ப்ரக்ருதிகளை வரக்காட்டும் க்ரூரனுமாய், தமப்பன் இடையனுமாய், ஊர்இடைச்சேரியுமாய், பிள்ளைகள் தாங்கள் தீம்பருமாய், காலம் கலிகாலத்

---

யாதி). “பை” என்றது விஸ்தாரமும், படமுமாகையாலே, இரண்டையும் தர்த்ரேண அருளிச்செய்கிறார் (விஸ்த்ருதமானபணத்தை) என்று. “பாய்ந்தவனே” என்று ஸம்போதிக்கிறவர்களுடைய உட்கருத்து, (ஏகதேத்யாதி). (தீம்பு) தௌஷ்ட்யம். முதற்பாட்டில், “மல்லாண்டதிண்டோள்” என்றும், ஏழாம்பாட்டில், “வாணனை யாயிரந்தோளும்” என்றும், இப்பாட்டிலும் க்ருஷ்ணாவதாரப்ரஸங்கம் வருகையாலே, மிகவு மிவ்விஷயத்தைப்பரிகைக்கு ஹேதுவைப் பலபடியாக ஆப்தஸம்வாதமுகேந தர்ஶிப்பிக்கிறார் (க்ருஷ்ணாவதாரமென்றாலித்யாதி). (ஆழ்வார்களெல்லாரும்) என்றது - (உ) “பிறந்தவாறும் வளர்ந்தவாறும்” என்று ஆழ்வாரும், (௩) “கோவலனாய் வெண்ணெயுண்டவாயன்” என்று பாண்பெருமாளும், மற்றைத் திவ்யப்ரபந்தங்களில் ஆழ்வார்களும் எங்கும்கண்ணனையே விரும்புகையாலே, பட்டர்தாம் ராமாவதாரத்தில்மிகவும் பக்ஷபதித்திருக்குமவராகையாலே, “ஆழ்வார்கள் ராமபக்ஷபாதிகளென்றதில்லை” என்று ஜீயருக்குக் கருத்தாகக்கருதி, அவ்வவதாரத்துக்கு மிவ்வவதாரத்துக்குமுள்ள விஶேஷங்களையும் அருளிச்செய்கிறார் (ராமாவதாரத்திலே யித்யாதி). (ராமாவதாரத்தில்)என்றது-ராமாவதாரம் பண்ணினபோதென்றபடி. (பிள்ளைகள்) என்றது - மேல் பிதாவென்று சக்ரவர்த்தியைச் சொல்லுகையாலே. (மந்த்ரிகள்) என்றது - வஸிஷ்ட்டாதிகளும் கார்யவிசாரதக்ஷராகையாலே. (அயோத்த்யை) என்றதுக்கு யோகார்த்தத்திலே திருவுள்ளம். (அங்குத்

---

(க) வி-பு-டு-எ-க. (உ) தி-வாய்-டு-௧௦-க. (௩) அமல-௧௦.

தோடு தோள்தீண்டியா யிருக்கையாலே என்வருகிறதோ! என்று பரி கைக்கு ஆழ்வார்களல்லதில்லைகாணும்" என்றருளிச்செய்தார். (உன்னைப் பல்லாண்டு கூறுதுமே) இப்படிப்பட்ட உன்னை அநுஸந்தித்தால் மங்களாசாஸந மொழியத் தரிக்க விரகுண்டோ வென்கிறார்கள். ... ... ... ... ... ... (கo)

அவ. — பதினோராம்பாட்டு. (அல்வழக்கித்யாதி) *அண்டக்குலத்திலே ஆஹ-தராய், "நெய்யிடை" என்கிற பாட்டிலே ஸங்கதரான ஐஶ்வர்யார்த்திகள் பாசுரத்தாலே திருப்பல்லாண்டு பாடுகிறார்.

மூ.—

அல்வழக்கொன்று மில்லாவணிகோட்டியர்கோ னபிமானதுங்கன்
செல்வனைப்போலத் திருமாலே நானுமுனக்குப் பழவடியேன்
நல்வகையால் நமோநாராயணாவென்று நாமம் பல பரவிப்
பல்வகையாலும் பவித்திரனே உன்னைப் பல்லாண்டு கூறுவனே. (கக)

வ்யா.— (அல்வழக்கொன்றுமில்லா) வழக்கல்லாதவை அநேகமிறே; தேஹத்தில் ஆத்மபுத்திபண்ணுகை வழக்கல்ல; *ப்ரக்ருதேஃ பரமான ஆத்மவஸ்துவை ஸ்வதந்த்ரமென்று அநுஸந்திக்கை வழக்கல்ல; தேவதாந்தரங்களில் பரத்வபுத்தி பண்ணுகை வழக்கல்ல; பக

---

தைக்கு) அவ்விஷயத்துக்கு. (இங்கு) க்ருஷ்ணாவதாரத்திலே யென்றபடி. "உன்னை" என்றதுக்கும், "கூறுதுமே" என்கிற ஸ்வரத்துக்கும் வாஸனை (இப்படிப்பட்ட இத்யாதி). (இப்படிப்பட்ட) என்றது - இப்படிநீம்பனை என்றபடி. ... ... ... ... ... ... ... (கo)

பதினோராம்பாட்டு.(அல்வழக்கித்யாதி) "பழவடியேன்" என்கையாலே, இப்பாட்டு அநந்யப்ரயோஜநர் பாசுரமாயிருக்க, இன்று திருந்தின ஐஶ்வர்யார்த்தி பாசுரமாம்படி எங்ஙனேயென்கிற ஶங்கையைப் பரிஹரிக்கைக்காக ஸங்கிழகேந அவதாரிகை (அண்டக்குலத்திலே இத்யாதி). ஆழ்வாரக்ரமத்தால் பல்லாண்டுபாடுகை மற்றவரிடத்திலும் காண்கையாலே, இப்பாட்டு ஐஶ்வர்யார்த்தி பாசுரமென்னத்தட்டில்லை. "பழவடியேன்" என்கிறதும் இதுக்கநுகூலமாகச் சொல்லவேணுமென்று கருத்து.

"ஒன்றுமில்லா" என்கைக்கு, அநேகமுண்டோவென்ன, (வழக்கல்லாதவை இத்யாதி). இத்தை உபபாதிக்கிறார் (தேஹத்தில் என்று தொடங்கி ஆறுவாக்யத்தாலே). வழக்காவது - ந்யாயம். இவையெல்லாம் அல்லாத வழக்காகில்; வழக்கொன்றுண்டாகவேணுமே இவருக்கென்ன; "கோன்"

வத்பஜநத்துக்கு ப(ஃ)லம் ப்ரயோஜநாந்தர மென்றிருக்கை வழக்கல்ல; அநந்யப்ரயோஜநனானாலும் உபாயாந்தர ஸாத்யமென்றிருக்கை வழக்கல்ல; பகவதநுபவத்தை "மமேத(ம்)ம்" என்றிருக்கைவழக்கல்ல; இனி, வழக்காவது-சேஷிக்கு மங்களாசாஸநம் பண்ணுகை என்றிறே இவரிருப்பது.(அணிகோட்டியர்கோன்) இவையொன்றுமின்றிக்கே, "அத்தலைக்குமங்களாசாஸநம் பண்ணுமதொன்றுமே வழக்கு" என்றுப்த்து அவ்வூரிலுள்ளா ரிருப்பது. இதுக்கடி இவர் என்று தங்களுக்கு நிர்வாஹகராக வாய்த்து நினைத்திருப்பது. "அணி" என்று-ஆபரணமாய், ஸம்ஸாரத்துக்கு ஆபரணமான ஊரென்கை.

(அபிமாநதுங்கன்) அபிமாநம் சேஷத்வ விரோதியாயிருக்க, அத்தால் மிக்கிருப்பரென்பா னென்னென்னில்; கர்மத்தால்வந்த துர்மாநமாய்த்து த்யாஜ்யம்; "தா(ஸோ)ஸோஹம்" என்கிறவைஷ்ணவாபிமாநம்உபாதேயமாகையாலேஅத்தால்பூர்ணராயிருப்பரென்கிறது. அதாகிறது - உகந்தருளின நிலங்களிலுண்டான குறைவு நிறைவுகளும், ஸ்ரீவைஷ்ணவர்களுடைய தேஹயாத்ரையில் குறைவு நிறைவுகளும் தம்மதாயிருக்கை. "செல்வன்" என்று - ஸ்வரூபப்ராப்தமான ஐஶ்வர்யத்தால் குறைவற்றவரென்கை. அதாகிறது - ஜ்ஞாந பக்தி வைராக்யங்களால் குறைவற்றிருப்பரென்கையும், (௧) "லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்நः-லக்ஷ்மணோலக்ஷ்மி ஸம்பந்நः" என்கிறபடியே (௨) "அஹம்

என்ற பதத்துக்கு விஶேஷணமாக்கி யருளிச்செய்கிறார் (இனிஇத்யாதி). (இவர்) என்றது - செல்வநம்பியை. கோட்டியர் - திருக்கோட்டியூரில் ஸ்ரீவைஷ்ணவர்கள். கோன் பததாத்பர்யம் (இவை இத்யாதி). (இவர்) செல்வநம்பி· இன்னதுக்கணியென்று சொல்லவேணுமே, அத்தையருளிச் செய்கிறார் (அணி இத்யாதி).

"துங்கன்" ஶ்ரேஷ்டன். அபிமாநஶப்தம் ஸாமாந்யஶப்தமாகையாலே, விஶேஷபர்யவஸாநம் பண்ணுவதாக நினைத்து, தத்விஷயஶங்கையை அநுவதித்துப் பரிஹரிக்கிறார்(அபிமாநமித்யாதி வாக்யத்ரயத்தாலே). வைஷ்ணவாபிமாநந்தான் ‡ வைஷ்ணவாபிமாநமென்றும், வைஷ்ணவ விஷயாபிமாநமென்றும்த்விவிதமாக்கிப்பரிஹரிக்கிறார்(அதாகிறதித்யாதி). "செல்வன்" என்று- தநவான். இத்தையும் விசேஷபர்யவஸாநம் பண்ணுகிறார்(செல்வனென்றித்யாதி). இத்தையும் த்விவிதமாகவிவரிக்கிறார் (அதாகிறதித்யாதி). "அஹம்ஸர்வம் கரிஷ்யாமி" என்றது செல்வநம்பி உக்தியா

(௧) ரா-பா-௧அ-௨௯. (௨) ரா-அயோ-௩௧-௨௫. ‡ வைஷ்ணவ இத்யபிமாநः.

ஸர்வம் கரிஷ்யாமி- அஹம்ஸர்வம் கரிஷ்யாமி'' என்றிருக்கையும். (போல (க) "உபமாநமசேஷாணாம்ஸாதூநாம்-உபமாநமசேஷாணாம் ஸாதூநாம்' என்கிறபடியே ஸாத்விகர்க்கு உபமாநபூமியாயிருந்தமவர். இவரை த்ருஷ்டாந்தமாக்கிக்கொண்டு, "பழவடியேன்" என்று, முன்பு ஐஸ்வர்யார்த்தியாய் இன்று ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்தவன் சொல்லுகை அநுபபந்நமன்றோ வென்னில்; கர்மத்தால் வந்த அஹங்காரம் போலல் தாஸ்யம ஸர்வாத்மாக்களுக்கும் ஸத்தாப்ரயுக்தமாகையாலே சொல்லுகிறார்கள். அதவா, நைஸர்க்கிகமான ஜ்ஞாநமுடையார்க்கும் இன்றுஸ்ரயிக்குமவனுக்கும் வாசியையாதே விஷயீகரிக்கும் ஈஶ்வராபிப்ராயத்தாலே சொல்லவுமாம்.

(திருமாலே) "இவ்வாத்மவஸ்து ஒருமிதுநசேஷம்'' என்று சேஷத்வ ப்ரதிஸம்பந்தியைச் சொல்லுகிறார்கள். இத்தால் - மாதாபித்ருசேஷத்வமும் தேவதாந்தர சேஷத்வமும் கர்மோபாதிகமென்கை. அதவா, தேவரிருக்கும் பிராட்டி நிருபகபூதையா யிருக்கிறாப் போலே, எங்களுக்கும் தாஸ்யம் நிரூபகமென்கிறார்கள் என்றுமாம்.

(நானும்) ப்ரயோஜநாந்தர பரதையாலே அநாதிகாலம் அந்யார்

க்கி யருளிச்செய்கிறாரென்று கண்டுகொள்வது. இவர் த்ருஷ்டாந்தீகரிக்கைக்குத்தகும்படி யிருப்பரோவென்ன; ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானைப்போலே ஸர்வோபமாந பூமியாயிருப்பரென்கிறார் (உபமாநமித்யாதி). இப்பாட்டுக்கு அவதாரிகையிலே 'ஐஸ்வர்யார்த்திகள் பாசுரத்தாலே'' என்றுநின்றீர்; இப்படிப்பட்ட செல்வநம்பியை த்ருஷ்டாந்தமாகச்சொல்லுகிறதும், மேலே "பழவடியேன்" என்கிறதும் சேராதே யென்கிற ஶங்கையை அநுவதித்து, ஸத்தாநிபந்தநமாகவும், பகவதபிப்ராயத்தாலே யென்றும் பரிஹரிக்கிறார் (இவரைஇத்யாதி வாக்யத்ரயத்தாலே). (கர்மத்தால்) இத்யாதிக்குக்கருத்து - ப்ரதிபந்தகமான அஹங்காரம்போலல் அநாதிஸித்தமான அடிமை ப்ரகாரத்தையாலே சொல்லுகிறார்களென்று. (நைஸர்க்கிகமான) ஸ்வாபாவிகமான.

"பழவடியேன்'' என்றதைக்கடாக்ஷித்து, "திருமாலே" என்றதுக்கு பாவம் ( இவ்வாத்மவஸ்து இத்யாதி ). பலிதம் (இத்தாலித்யாதி). இப்பதப்ரயோகம் த்ருஷ்டாந்தார்த்தமுமாமென்கிறார் (அதவா இத்யாதி).

நானும்' என்றதுக்கு ஹார்த்தபாவம் ப்ரயோஜநேத்யாதி). (அந்

(க) வி-பு-க-கஙு-கறுக.

ஊனுய்ப்போந்த நானும். சேஷிபக்கலிலே ப்ரயோஜநாந்தரத்தை அபேக்ஷிக்கையாவது-பதிவ்ரதை பர்த்தாவின் பக்கலிலே வ்யபிசாரத்தை அபேக்ஷித்தவோபாதியிறே. (உனக்குப் பழவடியேன்) உனக்கு சேஷித்வம் அநாதியான வோபாதி எனக்கும் சேஷத்வம் அநாதியென்கை. (உனக்கு) ப்ரயோஜநாந்தரத்தை அபேக்ஷித்துத் திருவடிகளிலே கிட்டினதுவே ஹேதுவாக அநந்யப்ரயோஜநனுக்கவல்ல உனக்கு.

இந்த ஸ்வரூபஜ்ஞாநம் எவ்வழியாலே பிறந்ததென்னில்; ஸகல வேதாந்ததாத்பர்யமான மந்த்ர ரஹஸ்யத்தாலே பிறந்ததென்கிறார் மேல். (நல்வகையால் நமோநாராயணவென்று)நாராயணனுக்கே உரியேன், எனக்குரியேனல்லேனென்கை. (நல்வகையால்) முன்பு அர்த்தவிதுரமாகஜபஹோமாதிமுகத்தாலே பிறந்த அந்வயமடையத் தீவகை யென்றிருக்கிறார்கள்; இதுதான் ஸர்வார்த்த ஸாதகமிறே, (க) "நமோநாராயணாயேதி மந்த்ரஸ்ஸர்வார்த்த ஸாதக꞉ - நமோநாராயணாயேதி மந்த்ரஸ்ஸர்வார்த்தஸாதக꞉" என்னக்கடவதிறே. (நாமம் பலபரவி) இவர் இவர்களை யழைக்கிறபோது, (உ) "அடிதொழுதாயிரநாமம் சொல்லி"என்றாரிறே; அத்தையிறே இவர்களும் சொல்லுகிறது. (பரவி) அக்ரமமாகச்சொல்லி. ஸாதநமானபோதிறே க்ரமாபேக்ஷையுள்

---

யார்ஹனுய்) என்றது - நான் எனக்குறுப்பாய் என்றபடி. ஈஸ்வரன் பக்கலிலேயன்றோ ப்ரயோஜநத்தைஅபேக்ஷித்தது, இது அந்யார்ஹதைகையாமோவென்ன (சேஷிபக்கலிலே இத்யாதி). "உனக்குப்பழவடியேன்" என்றதுக்கு இரண்டுதாத்பர்யம், ஸ்வரூபப்ரயுக்த தாஸ்யமாதல்,குணக்ருத தாஸ்யமாதல் உடையவனென்று. முந்தினது(உனக்கித்யாதி). இரண்டாவது (ப்ரயோஜநாந்தரேத்யாதி).

மேலுக்கவதாரிகை (இந்த ஸ்வரூபேத்யாதி). "நாராயண" என்றதுக்கர்த்தம் (நாராயணனுக்கே) என்றது. நமஶ்ஶப்தார்த்தம் (எனக்குரியேனல்லேன்என்றது."நல்வகை" என்றதுக்குத்தாத்பர்யம்(முன்பு இத்யாதி). (அர்த்தவிதுரமாக) அர்த்தஜ்ஞாந ரஹிதமாக. (அந்வயம்) ஸம்பந்தம். (தீவகை) - துஷ்ப்ரகாரம். மந்த்ரம் மோக்ஷஸாதநமன்றோ, ப்ரயோஜநாந்தரத்துக்கும் ஸாதநமோவென்ன (இதுதான் இத்யாதி). இதுக்கு ப்ரமாணம் (நமஇத்யாதி). இதில் ஐஶ்வர்யார்த்திக னென்கிறதை ஸூசிப்பிக்கிறார்(இவரிவர்களை இத்யாதிவாக்யத்வயத்தாலே). வ்யாவர்த்யம்(ஸாதநம்

---

(க) ப்ரஹ்மபு-நிஎ-உச. (உ) டு.

ளது. முன்பு "மமே(ஃ)தம்" என்றிருந்தவர்களுக்கு மங்களாசாஸந யோக்யராம்படி புகுர நிற்கைக்கு இசைவே வேண்டுவது.

(பல்வகையாலும் பவித்திரனே) ப்ரயோஜநாந்தர பரனை அசுத்தியைப்போக்கி, அதுக்கடியான அஹங்கார மமகாரங்களாகிற அசுத்தியைப்போக்கி, சேஷத்வந் தன்னிலும், மாதா பித்ரு சேஷத்வமென்ன, தேவதாந்தர சேஷத்வமென்ன, இவ்வோ அசுத்தியைப் போக்கிப் புகுர நிறுத்தினவனே! ஸ்வரூப ரூப குண விபூதிகளைப் பார்த்தாலும் பாபஹரனென்னவுமாம். (உன்னைப் பல்லாண்டுகூறுவனே) ஸௌந்தர்யாதிகுணயுக்தனை உன்னை மங்களாசாஸநம் பண்ணுகிறேன். ஏகவசநத்தாலே - கீழ்ச்சொன்ன புருஷார்த்திகள் மூவர் முகத்தாலும் தாமே திருப்பல்லாண்டு பாடுகிறாரென்னுமிடம் தோற்றுகிறது. ஐஶ்வர்யார்த்தி ஸங்கதனாகிற வளவிலும் ஏகவசநமாகையாலே இங்கும் அதுவேயாகிறதென்னவுமாம். ... ... (கக)

---

இத்யாதி). க்ரமாபேக்ஷை வேண்டாமையாலே பவிதத்தை யருளிச்செய்கிறார் (முன்பு இத்யாதி). இசைவே வேண்டுவது, வேறொரு நியதி வேண்டாவென்று கருத்து.

"நாமம்பலபரவி" என்றத்தையும், "நமோநாராயணா" என்றத்தையும், "உனக்குப்பழவடியேன்" என்றத்தையும் கடாக்ஷித்து, "பல்வகையாலும்பவித்திரனே" என்றதுக்குத்தாத்பர்யம் (ப்ரயோஜநாந்தரபரனை இத்யாதி). பல்வகைக்கு அர்த்தாந்தரம் (ஸ்வரூபேத்யாதி). "பவித்திரனே" என்று ஸம்போதித்திருக்கச்செய்தேயும், "உன்னை" என்று விஶேஷித்ததுக்கு ப்ரபந்தப்ரவர்த்தக ஸௌந்தர்யாதிவைஶிஷ்ட்யம் தோன்ற அர்த்தமருளிச்செய்கிறார்(ஸௌந்தர் யேத்யாதி). ஐஶ்வர்யார்த்திகளநேகராகையாலே "கூறுவன்" என்கிற ஏகவசநம் சேரும்படி எங்ஙனேயென்ன, இரண்டுவகையாக வருளிச்செய்கிறார் (ஏகவசநத்தாலே யித்யாதி). ஆழ்வார்தம்மிடத்தில் ஐஶ்வர்யார்த்தித்வத்தை ஆரோபித்து, தாமே மங்களாஶாஸநம் பண்ணுகிறாராகையாலே, இவ்வேகவசநம் ஆழ்வாரையே சொல்லுகிறது; இத்தால், கீழ் இருவரும் மங்களாஶாஸநம் பண்ணுகிற பாட்டுக்களில் அநந்யப்ரயோஜநத்வம் தமக்கிருக்கையாலே தத்பஹுத்வமாத்ரத்தையும், கைவல்யார்த்தித்வத்தையும், தத்பஹுத்வத்தையும், ஆரோபித்துக்கொண்டு,தாமே மங்களாஶாஸநம் பண்ணுகிறாரென்று கொள்ளவேணும். இவ்வுத்தமபுருஷைகவசநபஹுவசநங்களாலே யென்று ப்ரதயத்துக்குக்கருத்து.

அவ.—கிகமம்(பல்லாண்டென்றித்யாதி)இப்ப்ரபந்தத்தை அதிகரித்தார்க்கு ப(ஃ)லம்சொல்லுகிறதாய், ப்ரேமபரவசராய்க்கொண்டு மங்களாசாஸநம் பண்ணுகிறார். அநந்ய ப்ரயோஜநர்க்கும் தம்மோபாதி பகவத்ப்ரத்யாஸத்தி யுண்டாகையாலே அவர்களையழைத்தார்; ஐஶ்வர்ய கைவல்யங்களைப்பற்றி ஆஶ்ரயித்தவர்களும் பகவத்ப்ரபாவத்தாலே மங்களாசாஸநத்துக்காளாவரென்று அவர்களையழைத்தார்; அவ்வளவு மில்லாத ஸம்ஸாரிகளும் தம்முடைய பாசுரத்திலே இழியவே யாவதாத்மபாவி மங்களாசாஸநார்ஹராவர்களென்று இப்ப்ரபந்தத்தின் வைபவத்தை யருளிச்செய்கிறார்.

மூ'—

பல்லாண்டென்று பவித்திரனைப் பரமேட்டியைச் சார்ங்கமென்னும்
வில்லாண்டான்றன்னை வில்லிபுத்தூர் விட்டுசித்தன் விரும்பியசொல்
நல்லாண்டென்று நவின்றுரைப்பார் நமோநாராயணாயவென்று
பல்லாண்டும் பரமாத்மனைச் சூழ்ந்திருந்தேத்துவர் பல்லாண்டே.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.

வ்யா.—(பவித்திரனை) ஒருபாதியாலன்றிக்கே ஸ்வதஶ்ஶுத்த

அரு.—பன்னிரண்டாம்பாட்டு. (பல்லாண்டென்றித்யாதி). இவ்வாழ்வார் தாம் மங்களாஶாஸநமொழியச் செல்லாதவராகையாலே, ப(ஃ)லகதநமுகேந மங்களாஶாஸநம் பண்ணுகிறாரென்று அவதாரிகை (இப்ப்ரபந்தத்தை இத்யாதி). (சொல்லுகிறதாய்)என்றது-சொல்லுகிறாராய் என்றபடி. "சூழ்ந்திருந்தேத்துவர்" என்கையாலே "மங்களாஶாஸநம் பண்ணுகிறார்"என்கிறார். அதாவது - "ஏத்துவர்"என்றது - ஏத்தக்கடவர்கள் என்றுய்,பகவத்விஷயத்தில் மங்களாஶாஸநபரரை ப்ரார்த்திக்கையாலே, இப்பாட்டிலும் மங்களாஶாஸநம் பண்ணுகிறாரென்றபடி. அநந்யப்ரயோஜநரையும், ப்ரயோஜநாந்தரபரரையும் அழைத்தவோபாதி ஸம்ஸாரிகளையும் அழைத்துத்திருத்தாதே தலைக்கட்டக்கூடுமோவென்ன அருளிச்செய்கிறார் (அநந்யேத்யாதி). (அவ்வளவும்) அம்மாத்ரமும். அதாவது-ப்ரயோஜநாந்தரத்துக்காகவாகிலும் பகவத்ப்ரஸாத விஷயீக்ருதராகை. இவ்விடத்தில், (க)"முதற்சொன்ன மூவரும் நிக்ரஹத்துக்கிலக்கு; மற்றை இருவரும் அநுக்ரஹத்துக்கிலக்கு" என்கிற ஸ்ரீவசநபூஷணவாக்யம் அநுஸந்தேயம். ஆக ஸம்ஸாரிகளும் இப்ப்ரபந்தத்தில் இழிந்தார்களாகில் திருந்தக்கடவர்களென்றுகருத்து.

"பவித்திரனை"என்று இத்தை நிரூபகமாகச்சொல்லுகையாலே ஸ்வாபாவிகபவித்ரனென்று அருளிச்செய்கிறார் (ஒருபாதியால் இத்யாதி).

(க) ஸ்ரீவசநபூஷணம்.

ஞனவனை (௧) "शाश्वतंशिवम् - ஶாஶ்வதம்ஶிவம்" என்னக்கடவதிறே. இத்தால் அசுசி பதார்த்த ஸம்யோகத்தாலே தத்கததோஷை ரஸம்ஸ்ப்ருஷ்டனாகையும், ஸ்வஸம்பந்தத்தாலே அசுத்தன் சுத்தனாகையுமாகிற பரமபாவநத்வம் சொல்லுகிறது. அதாகிறது - சேதநாசேதநங்களில் வ்யாபித்தாலும் தத்கததோஷம் ஸ்பர்சியாதொழிகையும், நிர்ஹேதுகமாக நித்யஸம்ஸாரியை நித்யஸூரிகளோடே ஒரு கோவையாக்குகையும். (பரமேட்டியை) பரமே ஸ்தாநே ஸ்திதனானவனை.

(சார்ங்கமென்னுமித்யாதி)இது மஹிஷீ பூஷண ஆயுத பரிஜநங்களுக்கு முபலக்ஷணம். அங்குள்ளாரையிட்டுத் தன்னை நிரூபிக்கவேண்டும்படியிறே அவர்களுக்குத் தன்னோடுண்டான ப்ரத்யாஸத்தி. (சார்ங்கமென்னும் வில்லாண்டான்றன்னை) சார்ங்கமென்னும் வில்லென்றேபாய்த்து அதுக்கு ப்ரஸித்தி; மத்தகஜத்தை யாளுமவனென்னுமாபோலே, அத்தையாளுமவனென்றாய்த்து இவனுக்கேற்றம். (௨) "अविखन्नमिवाकाश मवष्टभ्यमहद्धनुः - ஆவிகந்தமிவாகாஶ மவஷ்டப்ய

இதுக்குப்ரமாணம்(சாஶ்வத மித்யாதி). (௩) "यो व शिवतमो रसः - யோவஶ்ஶிவதமோரஸ:" என்றும் (௪) "यच्छौचनिस्सृतसरित्प्रवरोदकेन तीर्थेन मूर्ध्न्यधिकृतेन शिवश्शिवोऽभूत् - யச்சௌசநிஸ்ஸ்ருதஸரித் ப்ரவரோதகேந தீர்த்தேந மூர்த்ந்யதிக்ருதேந ஶிவஶ்ஶிவோऽபூத்" என்றும் சொல்லுகையாலே,பாவநத்வம்ஶிவத்வமென்று திருவுள்ளம். "अक्षरम्, अच्युतम् - அக்ஷரம், அச்யுதம்" என்று விசேஷ்யநித்யத்வம் சொல்லுகையாலே,ஶாஶ்வதத்வம் ஶிவத்வரூபவிசேஷணத்திலேயென்றுகருத்து. "ஸ்வதஶ்ஶுத்தன்" என்றத்தால் பலிதம் (இத்தால் இத்யாதி). விவரணம் (அதாகிறது இத்யாதி).(கோவை) சேர்த்தி.

மற்றொருவரையும் ஆளவில்லையோ? "சார்ங்கமென்னும் வில்லாண்டான்" என்கிறதென்னென்ன, (இது மஹிஷீ இத்யாதி). ஆனால் இவர்களையிட்டு அறியும்படி அப்ரஸித்தமோவென்ன; (அங்குள்ளாரை இத்யாதி). ஆனால் "சார்ங்கவில்லாண்டான்" என்றால் போராதோ, "என்னும்" என்பானென்னென்ன; (சார்ங்கமென்னும் இத்யாதி). வில்லுடையவன் என்னாதே "ஆண்டான்" என்பானென்னென்ன,(மத்தகஜத்தை இத்யாதி). இப்படிசொல்லுகைக்குப் பெருமையென்னென்ன; ப்ரமாணம் (ஆவிகந்த

(௧) பு-ஸு-௫- (௨) ரா-யு-௧௦௦-௧௨. (௩) யஜு- (௪) பாகவத-

மஹத்தநுঃ"என்னக்கடவதிறே. இத்தால்- "மல்லாண்டதிண்டோள் மணிவண்ணா" என்கிற விடத்திலே பவித்ரதையை நினைத்து, "பர மேட்டியை" இத்பாதியாலே இரண்டாம்பாட்டிற்சொன்ன நித்ய விபூதியோகத்தை நினைக்கிறது.

---

மித்யாதி). உபக்ரமோபஸம்ஹாரங்களொத்திருக்க வேண்டுகையாலே அருளிச்செய்கிறார் (இத்தால் இத்யாதிவாக்யத்வயத்தாலே). (இத்தால்) என்றது-அஶுசிபதார்த்தஸம்யோகத்தால்தத்கததோஷை ஸம்ஸ்ப்ருஷ் டனுகையும், நிர்ஹேதுகமாக நித்யஸம்ஸாரியை நித்யஸூரியாக்குகையும் ஆகிறஇத்தால்என்றபடி. "மல்லாண்டதிண்டோள்"என்கிறஇத்தை ஸர்வ விரோதிநிவ்ருத்திக்கு முபலக்ஷணமாக்கி, இத்தாலே நித்யஸம்ஸாரியை நித்யஸூரியாக்குகிற பவித்ரதையைச் சொல்லுகிறதென்றும், "மணிவண் ணா"என்கிற இத்தை மணிபோன்ற ஸ்வபாவனென்றுக்கி, மணிக்கு அஶுசி பதார்த்தஸ்பர்ஶத்தாலே தோஷம் வாராமையாலே, தாத்ருஶஸ்வபாவத் தாலே வந்தபவித்ரதையைச் சொல்லுகிறதென்றும் விவக்ஷித்து உபக்ர மோபஸம்ஹாரைகரூப்யம் சொல்லுகிறாரென்று கண்டுகொள்வது. (௧) "மாவாய்பிளந்து" (௨) "மல்லரைக் கொன்ற" (௩) "மதுசூதன்" இத் யாதி பதப்ரயோகங்களுக் கெல்லாம் ஸ்வவிரோதி நிவ்ருத்திபரமாக வ்யாக்யாநங்களில் உண்டாகையாலே, இங்கும் "மல்லாண்ட" என்றது க்கு இப்படி விவக்ஷிதமென்னக் குறையில்லை. "மணி" என்று கருடப் பச்சைக்கும் உபலக்ஷணமாய், அது ஸ்வதோநிர்த்துஷ்டமுமாய், ஸ்வஸம் பந்தத்தாலே அந்யத்ர ஸர்ப்பாதிவிஷஹரமுமாயிருக்கையாலே, உபயவித பவித்ரதையும் விவக்ஷிதையாகயோஜிக்கவுமாம். இவ்வர்த்தம் ப்ரதமகாதா வ்யாக்யாநத்தில் அருளிச்செய்யாதிருந்தாலும், இங்கு இப்படி யருளிச் செய்கையாலே அங்குவிவக்ஷிதமென்று கொள்ளவேணும்; இப்படிகொள் ளுகைக்கு ஸூசகம், ப்ரதமாவதாரிகையிலே "ஸௌந்தர்யாதி" என்று ஆதிஶப்தப்ரயோகம் பண்ணியிருக்கும தது. இதிலே இந்த பவித்ரதையும் அந்தர்ப்பூதமென்றுகண்டுகொள்வது. "இடத்திலே" என்ற அநந்தரம்சொ ன்ன என்று ஶேஷம். இரண்டாம்பாட்டின் அவதாரிகையிலே "உபய விபூதியோகத்தைச் சொல்லுகிறது "என்றிருந்ததேயாகிலும்,இங்கே நித்ய விபூதியோகத்தைச் சொன்னது ஶதே பஞ்சாஶந்ந்யாயத்தாலே யென்று கொள்ளவேணும்.

---

(௧) தி-வாய்-௨-௧-௧0. (௨) (௩)

(வில்லிபுத்தூர் விட்டுசித்தன் - பல்லாண்டென்று - விரும்பிய சொல்) இப்போது, பகவத்ப்ராப்திகாமர், ப்ரயோஜநாந்தரபரர் என்று அடைவடைவே வந்து நின்றுரில்லையிறே; அவ்வவருடைய பாசுரங்களாலே தாமே யருளிச்செய்தாரென்னுமிடம் தோற்றுகிறதிறே, தம்முடைய வார்த்தையாகத் தாம் தலைக்கட்டுகையாலே. அவர்கள் பாசுரமாக அங்குச்சொல்லிற்று; ப்ரயோஜநாந்தரபரர்க்கும் பகவத்ப்ரபாவத்தாலே மங்களாஶாஸநம் பண்ணுகைக்கு யோக்யதையுண்டென்னு மிவ்வர்த்தத்தினுடைய ஸ்த்தைர்யத்துக்காகவும் மங்களாசாஸநத்தில் தமக்குண்டான ஆதராதிசயம் தோற்றுகைக்காகவும்.(வில்லிபுத்தூர் விட்டுசித்தன்) அவ்வூரில் பிறப்பாலே யாய்த்து பகவத்ப்ரத்யாஸத்தி; பகவத் ப்ரத்யாஸத்தியாலேயாய்த்து மங்களாசாஸந யோக்யமான ப்ரேமாதிசயம். "விட்டுசித்தன்" என்கிற திருநாமமுண்டாய்த்து - ஆழ்வார் விடிலும் தான்விடமாட்டாதே தன்பேறாக இவர் திருவுள்ளத்தைவிடமாட்டாமையாலே. (க) "விட்டுசித்தன் மனத்தே கோயில்கொண்டகோவலன்" என்னக்கடவதிறே.

---

அந்வயித்து ப்ரதீகம் (வில்லிபுத்தூர் இத்யாதி). முதலிரண்டுபாட்டாலே தாம் மங்களாஶாஸநம் பண்ணுகிறதாகவும், மேல் ஒன்பதுபாட்டாலும்தாம் சிலரையழைக்கிறதாகவும், அவர்கள் ஸங்கதராகிறதாகவும்அவர்களோடே மங்களாஶாஸநம் பண்ணுகிறதாகவுமாய்ச் செல்லாநின்றதே, இங்கே, இவர் சொல்லாக நிகமிக்கக்கூடுமோவென்ன, (இப்போது இத்யாதி). (இப்போது) என்றது - ஆனைமேலே திருவீதி வலம்வருகிற போது என்றபடி. (அடைவடைவேவந்து நின்றுரில்லையிறே) என்றது-உக்திப்ரத்யுக்தி முகத்தாலேவந்து இவர்முன்னேநின்றுரில்லையென்றபடி. இதுக்கு நியாமகம் (அவ்வவர் இத்யாதி). ஆனால் கீழ் அப்படி அழைக்கிறதாகவும் வந்ததாகவும் சொன்னது எத்தாலேயென்ன; (அவர்கள் பாசுரம்இத்யாதி). (தோற்றுகைக்காகவும்) என்றது-நமக்கெல்லார்க்கும் தோற்றுகைக்காகவுமென்றபடி. "வில்லிபுத்தூர் விட்டுசித்தன் விரும்பிய" என்ற ஸமபிவ்யாஹார தாத்பர்யம் (அவ்வூரிலித்யாதி வாக்யத்வயமும்). விஷ்ணு: சித்தே யஸ்யஸ: என்று விக்ரஹமாக்கித் தாத்பர்யம் (விட்டுசித்தனித்யாதி). (திருவுள்ளத்தைவிடமாட்டாமையாலே) என்றது-திருவுள்ளத்திலிருக்கையாலே என்றபடி. இதுக்கு ப்ரமாணம் (விட்டுசித்தனித்யாதி).

---

(க) பெரி-திரு-நி-ச-கக.

(நல்லாண்டென்று) இப்பாசுரம் சொல்லுகைக்கு ஏகாந்தமான காலமென்று காலத்தைக்கொண்டாடி. (௧) "అద్య మే సఫలం జన్మ- அத்யமே ஸபலம் ஜந்ம" என்னக்கடவதிறே. கண்டதடைய "மமேதம்" என்று போந்த அநாதிகாலம்போலன்றிக்கே பகவத்ஸம்ருத்திக்கு மங்களாசாஸநம் பண்ணக்கடவதாம்படி வந்ததொருகாலம் சேதநனுக்கு ஸுதுர்லபமிறே. (நவின்றுரைப்பார்) நவிலுகை-பயிலுகை; இடைவிடாதேயுரைக்கை.

(நமோநாராயணாயவென்று) அநாதிகாலம் "மமேதம்" என்றத்தைத் தவிருகையும், "தவேதம்" என்கையும். இத்தால் - மங்களாசாஸநயோக்யதை சொல்லுகிறது. (பல்லாண்டு) காலமெல்லாம். யாவதாத்மபாவியென்கிறது காலக்ருதபரிணாமமில்லாத தேசத்தில் ஆண்டையிட்டுச் சொல்லுகிறது - அந்தபரிணாமமுள்ள தேசத்தில் வர்த்திக்கிறவராகையாலே. (பரமாத்மனை) தனக்கு மேலின்றிக்கே, தன்னை யொழிந்தாரடங்க ஸ்வாதீநமாம்படி யிருக்கிறவனை. இத்தால் அமங்களங்களுக்கு அவகாசமின்றிக்கே யிருக்கையாலே, ஒருவனுடைய மங்களாசாஸநத்தால் ஓரேற்றமுண்டாக வேண்டாதேயிருக்குமவனை.

(சூழ்ந்திருந்தேத்துவர்) (௨) "నమః పురస్తాదథ పృష్ఠతస్తే నమోఽస్తు తే-

---

(இப்பாசுரம்) என்றது-இப்ப்ரபந்தமென்றபடி. காலத்தைக்கொண்டாடினபேருண்டோவென்ன (அத்யேத்யாதி). இப்படி கொண்டாடுகைக்கு உபபத்தியருளிச்செய்கிறார் (கண்டதித்யாதி).

நமஶ்ஶப்தார்த்தம் (அநாதிகாலம் மமேதமென்றத்தைத் தவிருகையும்) என்றது. "நாராயணாய" என்றதுக்கர்த்தம் (தவேதமென்கையும்) என்றது. உபயத்தாலும்பலிதம் (இத்தாலித்யாதி). விவரணம் (யாவதித்யாதி). (பரமேட்டியை) என்றபதத்தைக் கடாக்ஷித்து. "ஆண்டு" என்று சொல்லக்கூடுமோவென்ற சங்கையைத் திருவுள்ளம்பற்றிப் பரிஹாரம் (காலக்ருதேத்யாதி). பரமசப்தார்த்தம் (தனக்குமேலின்றிக்கே) என்றது. ஆத்மசப்த தாத்பர்யம் (தன்னையித்யாதி). இப்பதப்ரயோகதாத்பர்யம் (இத்தாலித்யாதி).

"சூழ்ந்திருந்து" என்றதுக்கு ப்ரமாண பூர்வகமாக ப்ரஸக்தியும் ஸம்பாதியாநின்றுகொண்டு, "ஏத்துவர்" என்றதுக்கு இத்தை ஹேதுவாக்கி

---

(௧) வி-பு-௫-௧௭-௩௧. (௨) ஃ-௧௧-௪௦.

நமஃ புரஸ்தாதத ப்ருஷ்ட்டதஸ்தே நமோஸ்துதே" என்கிறபடியே. முன்பே நில்லா முறுவலை அநுபவித்து அதிலே ஈடுபடும்; பின்பே நில்லாபின்னும் பிறகுவாளியுமான அழகை அநுபவித்து அதிலே ஈடுபடும்; இப்படி சுழியாறுபடாநிற்கச்செய்தே, கால்வாங்கவொண்ணாத வடிவழகு அதிசங்கையைவிளைத்து மங்களாசாஸநத்திலே மூட்டுமென்கை.

"பவித்திரனைப் பரமேட்டியைச் சார்ங்கமென்னும் வில்லாண்டான்றன்னை வில்லிபுத்தூர் விட்டுசித்தன்-பல்லாண்டென்று விரும்பியசொல் நல்லாண்டென்று நவின்றுரைப்பார் நமோநாராயணாயவென்று - பரமாத்மனைச்சூழ்ந்திருந்து பல்லாண்டும் - பல்லாண்டென்று -ஏத்துவர்" என்றந்வயம்.

திருப்பல்லாண்டு வ்யாக்யாநம் முடிந்தது.

—oo:o:oo—

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

———

யருளிச்செய்கிறார் (நமஇத்யாதி). (முறுவல்) ஸ்மிதம். (ஈடுபடுகை) வித்த்ராகை. (நில்லா) நிற்கச்செய்தே. (பின்னும்) அஸ்த்ரவாளம் முதலான பின்னழகும். (பிறகுவாளியாவது) தண்டிகைக்கொம்புபோலே வளைந்து திருப்பிடரியிலே தொங்குகிற அஸாதாரணமான ஆபரணவிசேஷம். வாஹநபரிஷ்காரமாகவுமாம். (சுழியாறுபடுகை). ஆற்றில் சுழிபடுகை யென்னுய், சுழலுகையைச் சொல்லுகிறது. (கால்வாங்குகை) பின்வாங்குகை. (விளைத்து) ஸம்பாதித்து.

இப்பாட்டுக்கு அந்வயம்தர்சிப்பிக்கிறார் (பவித்திரனையித்யாதி). (பல்லாண்டென்று ஏத்துவர்) என்றது - அத்த்யாஹ்ருதபதமாதல், அநுஷங்கதாகதபதமாதல். ... ... ... ... ... ... (௧௨)

திருப்பல்லாண்டு அரும்பதம் முடிந்தது.

—oo:o:oo—

ஜீயர் திருவடிகளே சரணம்.





ஸ்ரீமதே ராமாநுஜாய நமஃ.

# திருப்பல்லாண்டு

## ப்ரதிபதம்.

### குருமுகம்.

| | |
|---|---|
| யஃ | எவர், [லே |
| நரபதி | பாண்ட்ய ராஜாவினு |
| பரிக்லிப்தம் | ஏற்படுத்தப்பட்டதாய் |
| சுல்கம் | ந்தயமாகக் கட்டி வைதத பணமுடிப்பை |
| ஆதாதுகாமஃ | க்ரஹிக்கவேணுமென்ற இச்சை யுடையராய்க் கொண்டு, |
| குருமுகம் | ஆசார்யன் மூலமாக |
| அநதீத்ய | அத்யயநம் பண்ணும |
| அசேஷாந் | ஸமஸ்தங்களான [லோ |
| வேதாந் | வேத (அர்த்த) ங்களை யும் (அந்த ஸபையிலே) |
| ப்ராஹ | ப்ரதிபாதித்தாரோ, |
| ரங்கநாதஸ்ய | அழகிய மணவாளனு [க்கு |
| ஸாக்ஷாத் | நேரே |
| ஸ்வஶுரம் | மாமனாராய், |
| அமர | தேவதைகளினாலே |
| வந்த்யம் | ஸேவிக்கத் தகுந்தவராய் |
| த்விஜகுல | ப்ராஹ்மணஸமூஹத்துக்கு |
| திலகம் | திலகம்போலே ஶ்லாக்யராயிருக்கிற |
| தம் | அந்த |
| விஷ்ணுசித்தம் | பெரியாழ்வாரை |
| நமாமி | ஸேவிக்கிறேன். (க) |

### மின்னார்.

| | |
|---|---|
| நெஞ்சமே | ஓமநஸ்ஸே! |
| வந்து | (நீ) வந்த (அநுகூலித்த) படியாலே, |
| மின் ஆர் | ஒளிபெறாநின்ற |
| தடம் | பெரிய |
| மதிள் | ப்ராகாரங்களாலே |
| சூழ் | சுற்றப்பட்ட |

வில்லிபுத்தூர் என்று — ஸ்ரீ வில்லிபுத்தூரென்று
ஒருகால் — ஒருகாலாகிலும்
சொன்னார் — சொன்னவர்களுடைய
கமலபகழல — தாமரைப் பூப்போன்ற திருவடிகளை
சூடினோம் — சிரஸ்ஸில் அலங்காரமாக அணிந்தோம்;
முன்னாள் — முற்காலத்தில்
கிழி அறுத்தான் என்று — வித்யாசுல்கத்தை அறுத்தார் (பெரியாழ்வார்) என்று
உரைத்தோம் — சொல்லப்பெற்றோம், (அதினால்)
கீழ்மையினில் — (நரகாதி) நிஹீநதேசத்தில் (போய்)
சேரும் — அடையாநின்ற
வழி — மார்க்கத்தை
அறுத்தோம் — சேதித்தோம் (நிரோதித்தோம்). (உ)

## பாண்டியன்.

பட்டர்பிரான் — பெரியாழ்வார்
வந்தான் என்று — எழுந்தருளினாரென்று
பாண்டியன் — பாண்டிய தேசத்தரசனை வல்லபதேவன்
கொண்டாட — ஸ்தோத்ரம் பண்ண, (அதைப்பொருத)
ஈண்டிய — திரண்டிருக்கிற
சங்கம் — (ப்ராஹ்மண) ஸமூஹமானது
எடுத்து — (அர்த்தவாத வாக்யங்களையெல்லாம் ஆராய்ந்தெடுத்து
ஓத — (தேவதாந்தரபரத்வத்தைச்) சொல்ல (அப்போது)
வேண்டிய வேதங்கள் — ஸமஸ்தமான வேதங்களினுடைய அர்த்தங்களையும்
ஓதி — ப்ரதிபாதித்து (பரதத்வ நிர்ணயம்பண்ணி) (அதுக்குமேலே)
விரைந்து — த்வரித்து
கிழி அறுத்தான் — வித்யாசுல்கத்தை அறுத்துவிழவிட்ட பெரியாழ்வாருடைய
பாதங்கள் — திருவடிகளானவை
யாமுடைய — நம்முடைய
பற்று — ரக்ஷையாயிருக்கும்

## பல்லாண்டு.

மல் — (சாணூராதி) மல்லவர்க்கத்தை
ஆண்ட — (வென்று) வசமாக்கிக்கொண்ட
திண் — த்ருடமான
தோள் — தோள்களையுடையையாய்!
மணி — நீலரத்நம்போன்ற
வண்ணா — வடிவழகையுடையவனே!
பல் ஆண்டு — (மநுஷ்யமாநத்தாலே) எண்ணிறந்த வர்ஷங்களிலும்
பல் ஆண்டு — (இன்னும்) அஸங்க்யாதமான வர்ஷங்களிலும்
பல் ஆயிரத்து ஆண்டு — (அதுக்குமேலே)(தேவமாநத்தாலே) அநேகமாயிரம் வர்ஷங்களிலும்
பல்கோடி — (பின்னும்) (ப்ரஹ்மமாநத்தாலே) அநேகம் கோடிகளாய்
நூறாயிரம் — அநேகலக்ஷங்களாயுமுள்ள வர்ஷங்களிலும்

| | |
|---|---|
| உன் | தேவரீருடைய |
| செவ்வடி | சிவந்த திருவடியி(திருமேனியி)னுடைய |
| செவ்வி | அழகுக்கு |
| திருக்காப்பு | ரக்ஷையானது (உண்டாகவேணும்). (க) |

## அடியோமோடும்.

| | |
|---|---|
| அடியோமோடும் | ஸ்வதஸ்ஸித்த தாஸ்யத்தையுடைய எங்களோடும் |
| நின்னோடும் | ஸர்வசேஷியான உன்னோடும் (உண்டான ஸம்பந்தம்) |
| பிரிவு இன்றி | விச்சேதமில்லாமல் |
| பல் ஆயிரம் ஆண்டு | அநேகமாயிரம் வர்ஷங்கள் (செல்லவேணும்) |
| வடிவாய் | நிறமுடைத்தாயிருக்கிற (அதிஸுந்தரமான) |
| நின் | தேவரீருடைய |
| வலமார்பினில் | வலமார்பில் |
| வாழ்கின்ற | நித்யவாஸம் பண்ணுகின்ற |
| மங்கையும் | நித்யயுவதியான பெரிய பிராட்டியாரும் |
| பல் ஆண்டு | அநேகவர்ஷங்களில் (ஸுகமே வாழ்ந்தருளவேணும்) |
| சோதி | தேஜஸ்ஸாலே |
| ஆர் | நிறைந்த |
| வடிவு | திருமேனியையுடையளாய் |
| வலத்து | (தேவரீருடைய) வலதுபக்கத்தில் |
| உறையும் | பொருந்தி வர்த்தியாநின்ற |
| சுடர் | உஜ்ஜ்வலனான |
| ஆழியும் | திருவாழியாழ்வானும் |

பல் ஆண்டு.

| | |
|---|---|
| படை | ஆயுதங்களையுடைய |
| போர் | யுத்தத்திலே |
| புக்கு | ப்ரவேசித்து |
| முழங்கும் | த்வநியாநின்ற |
| அப்பாஞ்சசந்நியமும் | அந்த ஸ்ரீபாஞ்சஜந்யாழ்வானும் |

பல்லாண்டு. (உ)

## வாழாள்பட்டு.

| | |
|---|---|
| வாழ் | ஸுகரூபமாயிருக்கிற |
| ஆள் | (பகவத்)தாஸ்யத்தை |
| பட்டு | லபிக்கப்பெற்று |
| நின்றீர் | (கைங்கர்யத்தில்) நிலைபெற்றீராய்க்கொண்டு |
| உள்ளீரேல் | (ஆராவது) இருந்ீர்களாகில் [(கூடி) |
| வந்து | (எங்களோடு) வந்து |
| மண்ணும் | அங்குரார்ப்பணத்துக்கு) ம்ருத் (ஸங்க்ரஹண கைங்கர்யத்)தையும் |
| மணமும் | அவ்வுத்ஸவத்துக்கு நிர்வாஹகராயிருக்குமத்தையும் |
| கொண்மின் | (பகவந்நியமனத்தினால்) பெறப்பாருங்கோள். |
| கூழ் | கூழுக்கு (ப்ரயோஜநாந்தரத்துக்காக) |
| ஆள்பட்டு | அடிமைபூண்டு |
| நின்றீர்களை | இருக்கிற உங்களை |
| எங்கள் | அநந்யப்ரயோஜநரான எங்களுடைய |
| குழுவினில் | ஸமூஹத்தில் |

| | |
|---|---|
| புகுதலொட்டோம் | ப்ரவேசிக்க ஸம்மதியோம். |
| நாங்கள் | நாங்கள் |
| ஏழாள்காலும் | ஏழுதலைமுறையாக |
| பழிப்புஇலோம் | (ப்ரயோஜநாந்தரஸாதநாந்தரபரதையாகிற) குற்றமுடையோமல்லோம். |
| இராக்கதர் | ராக்ஷஸர்கள் |
| வாழ் | ஸுகமாக வாஸம் பண்ணுகின்ற |
| இலங்கை | லங்கையிலுண்டான |
| ஆள்பாழாக | ஆள்கள் நசிக்கும்படியாக |
| படை | யுத்தத்திலே |
| பொருதானுக்கு | சத்ருஸம்ஹாரம் பண்ணின சக்ரவர்த்தி திருமகனுக்கு |
| பல்லாண்டு | அநேக ஸம்வத்ஸரம் ஸுகமே வாழ்ந்தருளவேணுமென்று |
| கூறுதும் | சொல்லக்கடவோம். |

## ஏடுநிலத்தில்.

| | |
|---|---|
| ஏடு | சரீரத்தை |
| நிலத்தில் | (காரணபூதமான) மூலப்ரக்ருதியிலே |
| இடுவதன்முன்னம் | சேர்ப்பதற்குமுன்னே (சரீரம் நசிப்பதற்குமுன்னே) |
| வந்து | நாங்களிருக்குமிடம் வந்து |
| எங்கள் | பகவத்பரரான எங்களுடைய |
| குழாம் | கூட்டத்தில் |
| புகுந்து | ப்ரவேசித்து |
| கூடும் | (எங்களோடு) சேரவேணுமென்கிற |
| மனம் | மநஸ்ஸை |
| உடையீர்கள் | உடையவர்களாக ஆனீர்களாகில் |
| வரம்பு ஒழி | (நீங்களிட்டுக்கொண்ட) ஸ்வாதந்த்ர்யமாகிற வ்யவதாநமான நசிக்கும்படியாக [அ |
| வந்து | வ்விடத்தை விட்டு வந்து |
| ஒல்லை | க்ஷிப்ரமாக |
| கூடுமின் | (எங்களுடன்) சேருங்கள். |
| நாடும் | நாட்டிலுள்ள ஸாமாந்யரும் |
| நகரமும் | ராஜதாநியிலுள்ள விசேஷஜ்ஞரும் |
| நன்கு | நன்றாக |
| அறிய | அறியும்படி, |
| நமோ | "எனக்குரியேனலேன், |
| நாராயணாய | ஸர்வசேஷியான நாராயணனுக்கே அடிமை செய்யக் கடவேன்' |
| என்று | என்று சொல்லிக்கொண்டு |
| பாடும் | பாடவேணுமென்கிற |
| மனமுடை | மநஸ்ஸுண்டாம்படியான |
| பத்தர் | பக்தியையுடையவர்களாக |
| உள்ளீர் | ஆனீர்களாகில் |
| வந்து | எங்களுடன் வந்து பல்லாண்டு |
| கூறுமின் | சொல்லுங்கோள். (ச |

## அண்டக்குலத்துக்கு.

அண்டம் — ப்ரஹ்மாண்டங்களு
குலத்துக்கு — ஸமூஹத்துக்கு[டைய
அதிபதியாகி — ஸ்வாமியானவனும்,
அசுரர் — அஸுரர்களுடையவும்
இராக்கதர் — ராக்ஷஸருடையவும்
இண்டம் — நெருங்கியிருக்கிற
குலத்தை — கூட்டத்தை
எடுத்து — ஸமூலமாகஉத்தரித்து
களைந்த — பிடுங்கிப் போகட்டவனுமான
இருடீகேசன் — ஸ்ரீஹ்ருஷீகேசனுக்கு
தனக்கு
தொண்டக்குலத்தில் — அடிமை பூண்டவர்களுடைய திரளிலே
உள்ளீர் — இருக்கிறவர்களே!
வந்து — அநந்யப்ரயோஜநராய் வந்து
அடிதொழுது — திருவடிகளிலாஶ்ரயித்து
ஆயிரநாமம் — (அவனுடைய) ஸஹஸ்ரநாமங்களையும்
சொல்லி — உச்சரித்துக்கொண்டு
பண்டை — பழையதாய் (ப்ரயோஜநாந்தர பரமான)
குலத்தை — ஜந்மத்தை
தவிர்ந்து — ஸவாஸநமாகவிட்டு
பல்லாண்டு
பல்லாயிரத்தாண்டு
என்மின் — என்று சொல்லுங்கோள். (௫)

## எந்தைதந்தை.

எந்தை — நானும் என்தகப்பனும்
தந்தை — அவன் தகப்பனும்
தந்தை — அவன் தகப்பனும்
தந்தை — அவன் தகப்பனும்
தம்மூத்தப்பன் — அவனுக்குத்தகப்பனும்பாட்டனும் (ஆகிய)
ஏழ்படிகால் தொடங்கி — ஏழுதலைமுறைதுடங்கி
வந்து — மங்களாசாஸநம் பண்ண யோக்யராய்வந்து
வழிவழி — முறைமுறையே (க்ரமம் தப்பாமல்)
ஆள் செய்கின்றோம் — (நாங்கள்) அடிமைசெய்கின்றோம்.
திருவோணம் — திருவோணமென்கிற
திருவிழவில் — திருநாளிலே
அந்தியம் போதில் — ஸாயங்காலத்தில்
அரி உருவாகி — நரஸிம்ஹரூபியாய் அவதரித்து
அரியை — சத்ருவான ஹிரண்யனை
அழித்தவனை — ஸம்ஹரித்த நரஸிம்ஹனைக்குறித்து
பந்தனைதீர — (அவருடைய) பாலவ்யாதி தீரும்படி[று
பல்லாண்டுபல்லாயிரத்தாண்டுஎன்
பாடுதும் — மங்களாசாஸநம் பண்ணுவோம். (௬)

## தீயில்.

தீயில் — (ஸூர்யன் முதலான) தேஜஃபதார்த்தங்களைக் காட்டிலும்
பொலிகின்ற — அபிவ்ருத்த (அபிவ்ருத்த)மாய்க்கொண்டு
ஆழி — மண்டலாகாரமாய்

| | |
|---|---|
| திகழ் | விளங்காநின்ற |
| செம் | சிவந்த |
| சுடர் | தேஜஸ்ஸையுடையனுன |
| திருச்சக்கரத்தின் | ஸ்ரீஸுதர்சனாழ்வானுடைய |
| கோயில் | வாஸஸ்தானமான திவ்யாயுதத்தினுடைய |
| பொறியாலே | சிஹ்நத்தினாலே |
| ஒற்றுண்டு | ஸ்பர்சித்துக்கொண்டு (ஸமாஸ்ரயணம் பண்ணிக்கொண்டு) |
| நின்று | இதர விஷயங்களில் போகாமே பகவத் பரராய் இருந்து |
| குடி குடி | குலக்ரமமாக |
| ஆள் செய்கின்றோம் | கைங்கர்யம் பண்ணுகின்றோம். |
| மாயம் | அத்யாஸ்சர்யகரமாக |
| பொரு | யுத்தம் பண்ணாநின்ற |
| படை | ஸேனையையுடையனான |
| வாணனை | பாணாஸுரனுடைய |
| ஆயிரந்தோள் | ஆயிரம் தோள்களில் நின்றும் |
| பொழி | சொரியாநின்ற |
| குருதி | ரக்தமானது |
| பாய | (லோகமெங்கும்) பரவும்படியாக |
| சுழற்றிய | திருப்பின |
| ஆழி | சக்ராயுதத்தை |
| வல்லானுக்கு | ஆளவல்ல க்ருஷ்ணனுக்கு |
| பல்லாண்டு | |
| கூறுதும் | சொல்லுவோம். (எ) |

## நெய்யிடை.

| | |
|---|---|
| நெய் இடை | நெய்யளவாய் |
| நல்லது | அநந்யப்ரயோஜநமாக இடுவதாய் |
| ஓர் | விலக்ஷணமாய் (ஷட்ரஸோபேதமான) |
| சோறும் | அந்நத்தையும், |
| நியதமும் | (அதுதான்) ஸ்திரமாயிருக்கும்படியையும், |
| அத்தாணி | பிரியாத (அநவரதமான) |
| சேவகமும் | ஸேவையையும் (த்யாகத்தையும்), |
| கை | கையிலே பிடிக்கவல்ல |
| அடைக்காயும் | வெற்றிலைபாக்கையும் |
| கழுத்துக்கு | கழுத்திலே இடவல்ல |
| பூணொடு | கண்டாபரணத்தோடு கூட |
| காதுக்கு | காதிலே இடத்தக்க |
| குண்டலமும் | கர்ணபூஷணத்தையும் |
| மெய் இட | சரீரத்திலே பூசும்படியாய் |
| நல்லது | விலக்ஷண (அஹங்காராதி ரஹித)மாய் |
| ஓர் | அத்விதீயமான (பரிமளப்ரசுரமான) |
| சாந்தமும் | சந்தனத்தையும் |
| தந்து | கொடுத்து |
| என்னை | தேஹாத்மாபிமானியாய் என்னை |
| வெள் உயிர் | சுத்தஸ்வபாவனாக |
| ஆக்கவல்ல | பண்ணவல்லனாய், |
| பை உடை | பரந்த படங்களையுடைய |
| நாகம் | சேஷனுக்கு |
| பகை | சத்ருவான பெரிய திருவடியை |
| கொடியானுக்கு | த்வஜமாக உடையவனுக்கு |
| பல்லாண்டு | |
| கூறுவன் | சொல்லக்கடவேன். (அ) |

## உடுத்துக்களைந்த

உடுத்து — திருவரையிலே சாத்தி
களைந்த — அவிழ்க்கப்பட்ட
நின் — தேவரீருடைய
பீதகவாடை — பீதாம்பரத்தை (ப்ரஸாதமாக)
உடுத்து — தரித்தும்,
கலத்தது — தேவரீர் அமுது செய்த பாத்ரத்தில் மிகுந்ததை
உண்டு — புஜித்தும்,
தொடுத்த — மாலையாகக் கட்டப்பட்டும்
சூடி — (திருமுடியிலே) சாத்தி
களைந்தன — கழிக்கப்பட்டுமிருக்கிற
மலர் துழாய் — விகஸிதமான திருத்துழாயை
சூடும் — சிரஸ்ஸில் தரிக்குமவர்களுமான
இத்தொண்டர்களோம் — இப்படிப்பட்ட சேஷபூதரான நாங்கள்,
விடுத்த — நியமித்து விடப்பட்ட
திசை — திக்குகளிலேயுண்டான
கருமம் — கார்யங்களை (எல்லாம்)
திருத்தி — குறைவறச்செய்து (அதுக்குமேலே)
திருவோணம் — ச்ரவண நக்ஷத்ரமென்கிற
திருவிழவில் — திருநாளிலே (அமங்களங்கள் தீரும்படி),
படுத்த — படுக்கப்பட்ட
பை — பரந்த படங்களையுடைய
நாகு அணை — திருவநந்தாழ்வானாகிற படுக்கையிலே
பள்ளிகொண்டானுக்கு — கண்வளர்ந்தருளுமவன் விஷயமாக
பல்லாண்டு கூறுதும். (௯)

## எந்நாள்

எம்பெருமான் — வருத்த சேஷியானவனே!
உன்றனக்கு — தேவரீருக்கு
அடியோம் — சேஷபூதர்
என்று — என்ற அர்த்தத்தைச் சொல்லுகிற
எழுத்து — ப்ரணவமாகிற அக்ஷரத்தில் (நாள்)
பட்ட — (நாங்கள்) ஸம்பந்தித்த
எந்நாள் — எந்த நாளோ,
அந்நாளே — அன்றைய தினமே
அடியோங்கள் — தாஸபூதரானோம்,
குடில் — க்ருஹத்திலுண்டான புத்ர பௌத்ராதிகளும்
அடி — அடியாராய்க் கொண்டு
வீடுபெற்று — அஹங்கார மமகாரங்களை விட்டு
உய்ந்தது காண் — உஜ்ஜீவித்தார்கள் இடீர்.
செம் — அழகிய
நாள் — நாளிலே
தோற்றி — (க்ருஷ்ணனாக) திருவவதரித்து
திருமதுரையுள் — ஸ்ரீமதுராபுரியில் சென்று
சிலை — (கம்ஸனுடைய) வில்லை
குனித்து — வளைத்து (முறித்தும்), (அதுக்குமேலே),
ஐந்தலைய — ஐந்து தலைகளையுடையனுமான
பை — பரந்த படங்களையுடைய
நாகம் — பாம்பான காளியனுடைய
தலை — சிரஸ்ஸிலே
பாய்ந்தவனே — குதித்தவனே!
உன்னை — தேவரீர் விஷயமாக
பல்லாண்டு கூறுதும். (௰)

## அல்வழக்கு

திருமாலே — ஸ்ரியःபதியான ஸர்வேஸ்வரனே!
பல்வகையாலும் — (ஸ்வரூபாதி) அநேகப்ரகாரத்திலேயும்

